

ஆனந்தபோதினி அச்சுக்கூட மிஷின் அச்சியந்திரசாலை.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




தொகுதி 14 | சுக்கிலஹு வைகாசிமீ ௧உ | 1929ஹு மேமீ 14உ | பகுதி 11


## கடவுள் வணக்கம்.

அங்கை கொடு மலர் தூவி யங்கமது புளகிப்ப
வன்பினொ லுருகிவிழி நீ
ராருக வாராத முத்தியின தாவேச
வாசைக் கடற்குண் மூழ்கி
சங்கரா சுயம்புவே சம்புவே யெனவு மொழி
தழு தழுத்திட வணங்கும்
சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்க னேனையுந
தண்ணருள் கொடுத்தாள் வையோ
துங்கமிகு பக்குவச் சனகன் முதன் முனிவோர்கள்
தொழுதருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய நெறியை யொரு சொல்லா லுணர்த்தியே
சொரூ பானுபூதி காட்டிச்
செங்கமல பீடமேற் கல்லாலடிக் குள்வளர்
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்க வருதக்ஷிண மூர்த்தியே
சின்மயானந்த குருவே. (1)

ஆடுங் கறங்குந் திரிகையும் போல வலைந்தலைந்து
காடுங் கரையுந் திரிவதல்லானின் கருணைவந்து
கூடும் படிக்குத் தவமுயலாத கொடியரெமன்
தேடும் பொழுதென்ன செய்வார் பரானந்த சிற்சுடரே. (2)

ஆசனமூர்த் தங்க ளறவகண்டா காரசிவ
பூசைசெய வாசை பொருந்துநா ளெந்நாளோ. (3)

அஞ்செழுத்தி னுண்மை யதுவானு வப்பொருளை
நெஞ்சழுத்தி யொன்றாகி நிற்குநா ளெந்நாளோ. (4)

# அரும்பொருள் விளக்கம்

1. (இ-ள்.) அழகிய கரங்களால் மலர்களைச் சொரிந்து தேகம் புளகாங்கிதமடைய அன்பினால் மனங் கரைந்து கண்ணீர் ஆறாகப் பெருகதெவிட்டாத முக்தியின் ஆசா வேச கடல் மூழ்கி சங்கரா, சுயம்புவே, சம்புவே என மொழி குழறித் தொழுகின்ற சன்மார்க்க நெறி யில்லாத துன்மார்க்கனான என்னையும் நினது குளிர்ந்த அருளைக் கொடுத்து ஆட்கொள்வாயோ? பரிசுத்தமான பக்குவத்தோடு கூடிய சனகாதி முனிவர்கள் அருகில் தொழுது வீற்றிருப்ப (அவர்கட்கு) வாயினால் சொல்ல அரிதாகிய (மோக்ஷ) நெறியை ஒரு சொல்லால் அறிவுறுத்திச் சொரூபானுபவத்தைக் காட்டி சிவந்த பதுமாசனத்தில் கல்லால விருக்ஷத்தின் கீழ் எழுந்தருளியுள்ள முடிவான மோக்ஷ முதல்வனே! திரிசிரபுர மலையில் ஆன்மாக்க ளுய்யும்பொருட்டு விளங்கும் தக்ஷிணாமூர்த்தியே! சிதானந்த குரவனே.

இப்பாடலுள் ஆசிரியர் சிறந்த பக்தியின் பெருமையையும், அஃதற்ற தமது சிறுமையையும், ஆயினும் கடவுள் தமக்கு அருள் செய்யவேண்டும் என்ற ஆராமையையும் மிக அழகாகக் காட்டியுள்ளார். தக்க பக்குவம் வாய்ந்தோர்க்கே ஈசன் அருள் செய்வானென்பதனை, 'துங்க மிகு பக்குவ' என்னும் வாக்கால் குறிக்கின்றார். ஆயினும் அத்தகைய ஈசனே தமது பெருங் கருணையால் சகள வடிவத்தோடு ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுத் திரிசிரபுர மலைக்கண் எழுந்தருளி யிருப்பதை 'சிரகிரி விளங்க வரு தக்ஷிணாமூர்த்தியே' என்று கூறுகின்றார்—ஆகவே 'அங்கை கொடு—சன்மார்க்க'ர்களுக்கே அருள் செய்யும் ஈசனைத் 'துன்மார்க்க னேனையும் தண்ணருள் கொடுத்தாள் வையோ' வென்று கேட்கத் துணிகின்றார். ஆகவே இதனுள் ஈசனது கருணையும், ஆன்மாக்களின் தகுதி யின்மையும், ஈசனை அடையும் வழியும் அருளிச் செய்யப்பட் டுள்ளது.

அங்கை—அழகியகை. சுயம்பு—தானே உண்டாயது; தான் யாவற்றிற்கும் முதலாய்த் தனக்கொரு முதலின்றி யிருப்பது. சம்பு—சுகங் கொடுப்போன். தழுதழுத்திட—குழறிட. துங்கம்—பரிசுத்தம். சித்தாந்தம்—முடிவு. ஒரு சொல்லால்—இதனை பிரணவம் என்று சிலர் கூறுவர்; சிலர் ஊமைச் சொல்லாகிய மௌனாட்சரமென மொழிவர்; பின்னதே சரியானது.

2. இப் பாடல் ஈசனது அருளைப் பெற்றுத் தவம் புரியாமல் வீணே திரிந்து வாணாளைக் கழிப்போர்கள் சாகும் பொழுது அடையும் உதவியற்ற நிலையை நன்கு விளக்குகின்றது. இதனால் மறுமைக்கு உதவுவது தவம் ஒன்றே என்பது வலியுறுத்தப்பட்டது.

கறங்கு—காற்றாடி, திரிகை—குலாலன் சக்கரம், கரை—மேடு.

3. ஆசனம், மூர்த்தம் முதலிய சகுணோபாசனைகள் (நல்லனவாயினும்) அகண்டாகார பராபூஜையே யாவற்றினும் உயர்ந்தது என்பதை இப் பாடல் குறிக்கின்றது.

4. பஞ்சாட்சரப் பொருளாகிய கடவுளை வணங்கும் நெறி நெஞ்சகத்தில் ஒன்றிய தியானந்தான் என்பது இதன் கருத்து.




## மறந்துவிட்டோம்.

நமது அருமைத் தமிழ்நாடு-மற்ற உலகப் பகுதிகளெல்லாம் காடுகளிலும், மலைகளிலும், குகைகளிலும், காதிலும், மூக்கிலும் சங்குகளையும், வளையங்களையும் மாட்டிக்கொண்டு, தேக மெல்லாம் பச்சை குத்தியவர்களாய், மிருகங்களோடு மிருகங்களாய் வேட்டையாடிப் பச்சை ஊனையுண்டு காட்டு மிராண்டிகளாய் வாழ்ந்துவந்த அக் காலத்திலேயே—'தொன்று நிகழ்ந்த தனைத்து முணர்ந்திடும்' சரித்திரக்காரர்கள் 'தெரியவில்லை, மிகமிகப் பழங் காலம்' என்றுகூறி வியக்கும் அத்தகைய பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே-தமிழர்களே உலகில் முதல் முதல் தோன்றிய ஜாதிய ரென்று மேல்நாட்டுக் கலைவல்லாரும் சந்தேகிக்கும் வண்ணமான மனித ஜாதியின் ஆரம்பச் சூரியோதயத்திலேயே நம் தமிழரசி நாக ரிகம் பெற்ற நல்லெழில் வாய்ந்த நாட்டினளாய் விளங்கினாள் என்று நாம் பெருமை பாராட்டிக் கொள்ளுகின்றோம். மிகப் பழைய நாக ரிகங்களாகிய பாபிலோனியா, கிரேக்க, ரோம, எகிப்திய நாகரிகங்கள் தோன்றியதையும், வான்முட்டும் புகழ்வீசித் தலை தூக்கி நின்றதை யும், பின்பு அவை திடீரென வீழ்ந்து மறைந்ததையும் நம் தமிழரசி இருகண்ணாலும் கண்டு வருந்தினாள் என்பது வாஸ்தவமே. ஆனால் இவ்வாறெல்லாம் பெருமை பேசிக்கொள்ளும் நாம் நமது இன்றைய நிலையை மறந்து விடுகின்றோம் என்பதும் துக்ககரமான ஓர் உண் மையேயாகும்.

நமது அருமைத் தமிழரசி நம்மை எத்துணைச் சீரோடும் சிறப் போடும் வளர்த்து வந்தாள். நம்மை 'வான மென்னும் தன் கையா லணைத்து, வையமென்னும் தன் மடிமீதிருத்தி, ஞானமென்னும் நற் பாலூட்டி, தீந்தமிழ்த் தென்றலென்னுந் தொட்டிலிற் தாலாட்டி பஞ்சியாலும், பட்டினாலும் பல்வகை யாடை யுடுத்தி, நமக்குத் தென்கடல் முத்தும், பவளமும், மேற்கு மலைப் பொன்னும், மணியும் அணிசெய்து பூட்டி, நமது ஆசைத் தமிழ்ச் சொல்லின் அற்புத

மழலையில் மகிழ்ந்து, குன்றும், மலையும், குளிர்காவும், நறுநீரும், பண்ணை வெளியும், நந்தவனச் சோலையும், குயிலும், மயிலும், கிளியும், மானும், மரையும் விளையாட்டுத் தோழராயிருக்க வமைத்து, கம்பன் களித்த கதிர்நிலா காட்டி, 'கன்னலுந் தேனும் கனியுமின் பாலும், கதலியும் செந்நெலும் நல்கி' எக்காலும் நம்மை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்த்து வந்த தமிழரசியை நாம் அறவே மறந்துவிட்டோம். அன்று முதல் இன்றுவரை நமக்கு அவள் போதித்துள்ள நல்ல நல்ல நீதிகளும், கவிதைகளும், கானங்களும், வீரங்களும், வெற்றிகளும் எத்துணை? அவள் நமக்குப் 'பொய்யா நாவிற்' கபிலனது பொன்னுரைகள் புகட்டினள். தீந்தேன் சுவையுள்ள 'கற்றோர்கள் ஏத்தும் கலித்தொகையைப்' பருகக் கொடுத்தாள். இளங்கோவடிகளின் இன்பமயமான 'நெஞ்சை அள்ளுஞ் சிலப்பதிகார மென்றோர் மணியாரம்' பூட்டினள். வள்ளுவர் தந்த தெள்ளிய குறளைப் பாலோ டூட்டி மகிழ்ந்தாள். கம்பனுர் இயற்றிய காவியச் சோலையில் நம்மைக் கைப்பிடித்துக் கூட்டிப் போய் ஆங்குள்ள மலைகளையும், ஏரிகளையும், நதிகளையும், வானத்து மீன்களையும், திங்களையும், பரிதியையும், சீதை ராமன் முதலியோரையும், அயோத்தியின் அருமையையும், மிதிலையின் பெருமையையும், வணங்காமுடி மன்னனாகிய ராவணேசனது ஆடம்பரத்தையும் எல்லாவற்றையும் காட்டிக் காட்டிக் களித்தாள். கம்பரது புது உலகு, இயற்கையைக் காட்டிலும் அழகுற மிளிர்ந்தது. தனது அருமைத் திருமேனி யெங்கணும் கோயில் கொண்டருளிய திருமாலையும், சிவ பெருமானையும், தன்னுடைய அருமைக் குமாரனாகிய குமார தேவனையும், வள்ளித் தேவியையும் தில்லை நடனத்தையும், அரங்கத் தறிதுயிலையும், ஆழ்வார்களின் பரவசத்தையும், நாயன்மாரின் நற்செயல்களையும், தேவாரத் திருவாசகத் திருவாய்மொழிப் பொக்கிஷங்களையும் காட்டினள். ஆணும் பெண்ணும், களிறும் பிடியும், சேவலும் பெட்டையும் ஈசனாகவே தோன்றின நம் அப்பர் பெருந்தகைக்கு. நம்மாழ்வார் கடலிலிலும், மலையிலும், வானத்திலும், வையத்திலும் கண்ணனையே கண்டு மகிழ்ந்தார். ஆனால் நாம் இன்று இவைகளையெல்லாம் மறந்துவிட்டோம். திருவள்ளுவரின் திருக்குறளைப் பற்றி நமக்கொன்றும் தெரியாது. ஆனால் மார்க்கஸ் அரீலியஸ் அன்டோனினஸ் பயஸ் (Marcus Aurilius Antoninus Pius) என்பாரின் நீதி மொழிகள் நமக்கு நன்கு தெரியும். இளங்கோவும், கம்பனும் நம் எண்ணத்தை விட்டேகி விட்டனர்; மில்டனும் (Milton) ஷேக்ஸ்பியரும் (Shakespeare) அவர்களிடத்தைக் கைப்பற்றிக்கொண்டனர். கலித்தொகையும், அகநானூறும், குறுந்தொகையும் விட்டுப் பால்க்ரேவ் (Palgrave) 'பொன் பொக்கிஷம், (Golden Treasury) என்னும் கவிதைத் திரட்டில் நாம் இது காலை களிக்கின்றோம். சமய சாத்திரங்களோ, பக்தி நூல்களோ சமயத்தை

ஒதுக்கித் தள்ளும் மேனாட்டு நாகரிகத்தில் மூழ்கிவிட்டன. ஆகவே இன்று நாம் நம் தாயை மறந்துவிட்டோம். அவள் கொடுத்துள்ள அருளை மறந்துவிட்டோம். மார்கஸ்ஸையோ, மில்டனையோ, ஷேக்ஸ்பியரையோ நாம் குறை கூறவில்லை. அவர்களை மனித தேவர்கள் என்று போற்றுகின்றோம். ஆனால் நம் நாட்டு நமது அருமைச் சகோதரராகிய கம்பர், இளங்கோ, வள்ளுவர் முதலான மானிடத் தேவர்களையும் நாம் மறந்துவிடக்கூடாது என்பதே நமது வாதம். எம்மை மன்னிப்பீரேல் நாம் சிவவாக்யர் சொல்வதுபோல் 'பெற்ற தாயை விற்றடிமை கொள்ளுகின்ற பேதை'களாய் வாழ்கின்றோம் என்பதில் ஐயமில்லை. தன்வீட்டைக் கவனியாமல் அயல் வீட்டைச் செம்மை செய்யப்போவது அறிவுடைமை யாகாது. அது மாதா வயிறெரிய மகேஸ்வர பூஜை செய்வதையே ஒக்கும்.

தமிழன்னை அன்று தம் புதல்வர்கள் அழியாத ஆண்மையும் அஞ்சாத வீரமும் படைத்த தீரர்களாய்த் திகழ்ந்ததைக்கண்டு மகிழ்ந்தாள். தான் செய்த குற்றத்திற்காகத் தன் கையை வெட்டிக் கொடுத்தான் அவளது மணிவயிற்றுதித்த ஓர் அரசச் சேய். ஒரு நாள் காசிக்குச் செல்வான் ஒரு பார்ப்பனன் தன் மனைவி துணையின்றி வருந்துவதைப் பார்த்து 'அரசன் காப்பான்' என்று சொல்லிப் போனபின் அவனில்லா வேளையில் ஒவ்வொரு நாளிரவும் அரசன் அவன் இல்லத்தைக் காத்து வந்தான். அப் பார்ப்பனன் ஊர் திரும்பி மனைவியோடு இல்லத்தில் பேசிக்கொண் டிருக்குங்காலை அரசன் அவ்வுண்மையறியாதவனாய் வேறோர் மனிதன் அவ் வீட்டுள் புகுந்துவிட்டான் எனக் கருதிக் கதவைத் தட்டினான். அந்தணன் தன் மனைவிபால் ஐயங்கொண்டு ஏதேதோ சொல்வதறிந்து அவன் ஐயங்கொள்ளாவண்ணம் வேந்தன் மற்ற வீடுகளின் கதவுகளையும் தட்டி விட்டுச் சென்றான். மறுநாள் வழக்குவரத் தன் குற்றத்திற்காக அரசன் தானே தன் கையை வெட்டிக்கொண்டான். இத்தகைய நீதி எங்கேனும் உண்டா? இவ்வரசனாகிய பொற்கை மாறனது வீரத்தை என்னென்று புகழ்வது. கோவலனைப் பொன்செய் கொல்லனது சொற்கேட்டுக் கொலைபுரிந்த பாண்டியன் தன் குற்ற முணர்ந்த காலை 'யானோ அரசன், யானே கள்வன்' என்று கீழ விழுந்து உயிர் நீங்கிய வீரம் யாருக்கு வரும்? மனுச்சோழன் தேர்க்காலில் தன் மகனை ஊர்ந்த கதை யாவருமே அறிந்த தொன்றாகும். கலிங்கம் வென்ற கருணாகர வீரனின் செவ்வியை என்னென்பது.

> 'விண்ணை யிடிக்கும் தலையிமையம்— எனும்
> வெற்பை யடிக்கும் திறனுடையார்—சமர்
> பண்ணிக் கலிங்கத் திருள்கெடுத்தார்—திறற்
> பார்த்திவர் நின்ற தமிழ் நாடு'

என்று போற்றப்படுபவன் இத் தமிழ் வேந்தனன்றோ? வட நாட்டுப் பாடலி புரத்திலும் மாண்பமைந்த தலைமைச் சேனையாய்த்

திகழ்ந்தது தமிழ்ப் பெருஞ் சேனை யன்றோ? பாரி வள்ளல் வள்ளன்மையும், சிபிமன்னன் பெருங் கருணையும், காந்தமன் ககந்தன் முதலியோரின் நீதிமுறைகளும் நாம் எங்கு காணமுடியும்? ஆனால் அந்தோ இன்று நாம் நமது முன்னோர்கள் வீரத்தைப் படித்தேனும் அறிந்துகொள்ள விருப்பமற்றவரா யிருக்கின்றோம். தமிழ்த் தாய் அது கண்டு கவலுகின்றாள். நமது மறப்பை நீக்கி வீரங்கொள்ள வேண்டுகின்றாள்.

மற்றும் பழங்கால நம் சோதரிகள் எத்துணை வீரஞ் செறிந்தவர்களாய் வாழ்ந்தனர். அவர்களைப் போன்று இது காலை 'மகனைப் பெறுதல் என் கடன், அவனை வளர்த்தல் தந்தையின் கடன், நல்ல நடை பயிற்றல் வேந்தன் கடன், வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லனது கடன், போர் முகத்தில் யானை யெறிந்து வெற்றியோடு திரும்புதல் என் மகனின் கடன்' என்று யாவரே சொல்லத் துணிவர். தன் மகன் போர்முகத்திற் புறங்கொடுத்தான் என்று அவனைப் பெற்ற வயிற்றைத் துமித்த வீரப் பெண்டிர் தமிழ் மகளிரல்லரோ? இரண்டு நாட்கு முந்திய சண்டையில் தகப்பனிறக்கப் பின் மறுநாட் போரில் கணவனிறக்க அப்போதும் மயங்காமல் தன் ஒரே மகனைப் போர்க்களத்துக் கனுப்பிய புகழ் மிக்க வீரப் பெண்மணி தமிழ்ப் பெண்மணி யன்றோ? இன்று நாம் இவைகளையெல்லாம் மறந்து விட்டோமே. நம் அன்னைமார்கள் அறியாமைக் குழியில் அவலமாய் வாழுகின்றனரே. இதனைக் கண்டு தமிழன்னை கண்ணீர் விடுகின்றாள். நாமோ வாளாவிருக்கின்றோம்.

பின்னும் நம்மாசி தமிழ்த்தாய் நமக்குச் செய்துள்ள நன்மைகள் எண்ணித் தொலையா, ஏட்டில் அடங்கா. எத்துணை சிறப்புச் செல்வங்கள், காவியங்கள், ஞான நல்லுரைகள் இவை யாவற்றிற்கும் மேல் எத்துணை அழகான அகவாழ்வு நெறி நமது நாட்டில் தழைத்திருந்தன. இன்று நாம் இவை யாவற்றையும் மறந்து காம வாழ்வினில் களிக்கின்றோம். தமிழச் சகோதரி சகோதரர்களே மறதியின் உறக்கத்தில் உறங்கியது போதும், உடனே எழுங்கள். ' எழுமின் விழிமின் கருதிய கருமம் கைகூடும் வரை உழைமின்.

நாம் வெறுமனே பழங் காலப் பெருமைகளைப் பேசிக் கொண்டிருப்பதில் மட்டும் பயனில்லை. புதுக்காலச் சக்திகளை, சாத்திரங்களை, கலைகளை, காரியங்களை யெல்லாம் கையாள முயலவேண்டும். தமிழன்னைக்கு இன்னும் புதுப் புது ஆடைகளும் அணிகளும் பூட்ட வேண்டும்.

பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்
இறவாத புகழுடைய புது நூல்கள் தமிழ்
மொழியில் இயற்றல் வேண்டும்

மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் பயனுமில்லை
திறமான புலமை யெனில் வெளி நாட்டார்
அதை வணக்கஞ் செய்தல் வேண்டும்.

தன் பெருமையைத் தானே சொல்லுதல் அகங்காரம். அதனைப் பிறர் கூறவேண்டும். எங்கள் பாட்டனார் ஒரு சிங்கத்தோடு சண்டையிட்டார், எங்கள்தகப்பனார் ஒரு யானையைத் தோற்கடித்தார் என்பதால் மட்டும் ஒருவன் நிரந்தரமான பெருமைக்குப் பாத்திரனாகான். நம் முன்னோர்கள் மூலம் நம் தமிழன்னை நமக்குச் செய்துள்ள நலன்கள் மிகப் பெருமைபடைத்தவையே. ஆனால் அந்நலன்களை நாம் இன்று எவ்வாறு உபயோகிக்கிறோம். நம் தகப்பன் பாட்டனைப் போல் வீர தீரங்கள் செய்யாவிடினும் நாம் ஒரு பூனையோடாவது போர் செய்ய முடியுமா என்பது தான் கேள்வி? இன்று நாம் தமிழுக்கு யாது செய்துள்ளோம்? என்று எண்ணிப் பார்த்து ஆவன செய்ய முற்பட வேண்டும். இனியாவது நாம் மறந்திருக்கும் முன்னோர் செயல்களைக் கையாள மறவாதிருக்க வேண்டும். 'குந்தித் தின்றால் குன்றும் மாளும்' என்பதுபோல் பழைய தமிழ்ச் செல்வத்தைப் போற்றிக் காப்பது மட்டும் போதாது. புதுமைச் செல்வமும் சேர்க்கவேண்டும். முற்காலத்தவரின் வீரத்தையும், ஆண்மையையும் நாம் நம் நாட்டை நலமுறுத்துதலில் செலவு செய்வோமாக. நம் நாடும், மொழியும், நாகரிகமும் வளர்ந்து சிறந்து ஓங்க எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவானாக.

ஓம் தத் ஸத்.

---

## சந்தா நேயர்களுக்கு
## 15-வது ஆண்டின் முன்னறிவிப்பு.

**நம் போதினியின் மீது** அன்பு செலுத்திவரும் சந்தாதாரர்களாகிய நண்பர்களே! நாளிது சுக்கிலஞு ஆடிமீ கவ (16-7-1929) நம் ஆனந்த போதினிக்கு 15-வது ஆண்டு பிறக்கப்போகிறது. ஆதலின், சந்தாதாரர்கள் ஷை 15-வது ஆண்டின் சந்தாத்தொகையை நாளிது சுக்கிலஞு ஆனிமீ கவ (14-6-1929)-க்குள் மணியார்டர் மூலமாகவோ, நேரிலோ செலுத்திவிடும்படி கோருகிறோம். பத்திரிகையை நிறுத்திக்கொள்ள விரும்புவோர் அவ்விவரத்தை ஷை 14-6-1929-க்குள் கார்டின் மூலமாகவோ நேரிலோ தெரிவித்துவிடவேண்டும். மேற்கூறியபடி சந்தாத்தொகையை முன்பணமாகச் செலுத்தி விடுகிறவர்களுக்கு வழக்கம்போல் நாளிது சுக்கிலஞு ஆனிமீ சஞ்சிகையும், அதற்குப் பின்வரும் சஞ்சிகைகளும் சாதாரண போஸ்டில் அனுப்பப்பட்டுவரும். பத்திரிகையை நிறுத்திக்கொள்ளும்படி தெரிவித்தவர்களுக்கு நாளிது சுக்கிலஞு ஆனிமீ சஞ்சிகைமட்டும் சாதாரண போஸ்டில்

வந்துவிடும். இங்குக் குறித்தபடி சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பாதவர்களுக்கும், பத்திரிகை தங்களுக்குத் தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காதவர்களுக்கும் அடுத்த 15-வது ஆண்டின் சந்தாத் தொகைக்காக நாளிது சுக்கிலஹு ஆனிமீ பத்திரிகை வி. பி. யில் அனுப்பப்படும். இவர்கள் சந்தாத் தொகையை அனுப்பாமலும், பத்திரிகை வேண்டாமென்று தெரிவிக்காமலு மிருப்பதால் பத்திரிகையை வி. பி. யில் பெற்றுக் கொள்ள விருப்பமுடையவர்களாய் இருக்கிறார்களென்று நாங்கள் உறுதி கொள்கிறோம். அதனாலேயே இவர்களுக்கு வி. பி. யனுப்பப்படுகிறது. ஆதலின், இத்தகைய நண்பர்கள் வி. பி. யைத் திருப்பிவிடாமல் பெற்றுக்கொள்ளும்படி கோருகிறோம். இவ்வாறு வி. பி. யைப் பெற்றுக்கொள்கிறவர்களுக்கும் சஞ்சிகைகள் வழக்கம்போல் அனுப்பப்பட்டுவரும். வி. பி. யில் 3 அணா அதிகச் செலவும், சஞ்சிகை வந்துசேர வீண் காலதாமதமும் நேருகின்றன. ஆதலின், எல்லோரும் முன்பண மனுப்பிவிடுவதே நலம்.

பினாங்கு, சிங்கப்பூர் முதலிய மலேயா நாடுகளுக்கு வி. பி. இல்லையாதலின், அவ்விடங்களிலுள்ள சந்தாதாரர்கள் எல்லோருமே சந்தாத் தொகையை முன்பணமாக அனுப்பிவிடவேண்டும்.

இங்குக் குறிப்பிட்டிருப்பவைகள் எல்லோருக்கும் நன்மை தரக்கூடியனவாதலின் சந்தாதாரர்களாகிய நண்பர்கள் வீண் குதர்க்கம்செய்து நமக்கு வீண் சிரமத்தை யுண்டாக்காமல் இவற்றின்படி நடந்துகொள்ளுமாறு ஒவ்வொருவருக்கும் நினைப்பூட்டுகிறோம். விஷயத்தை யுணராமல் வீண் தர்க்கம்செய்து கடிதங்களெழுதி வேதனையை யுண்டாக்குவோரின் உள்ளப்போக்கைப்பற்றி வருடந்தோறும் குறிப்பிட்டெழுதியிருக்கிறோம். அவற்றை யுணர்ந்த புத்திமான்களுக்கு அவர்கள் செய்கை நன்மைதராததென்பதும், நாம் செய்திருக்கும் ஏற்பாடு இருபாலார்க்கும் நலந்தரத்தக்கதென்பதும் விளங்கும். ஆதலின் புத்திமான்கள் நுட்பமாக எல்லாவற்றையும் ஆராய்ந்து வீண் தர்க்கம் செய்யாமல் நம்முடைய ஏற்பாட்டின்படி நடந்துகொள்வார்களென்றே நம்புகிறோம்.

---

முன்பண மனுப்புவோர் பழைய சந்தாதாரர்களாயிருந்தால், மணியார்டர் கூபனில் தங்கள் சந்தாநம்பரைக் குறிப்பிட்டு, "15-வது ஆண்டுக்கு" என்று விவரம் எழுதி யனுப்பவேண்டும். புதிய சந்தாதாரர்களாகச் சேருகிறவர்கள் புதிய ஆண்டுக்கு என்ற விவரம் எழுதி யனுப்பவேண்டும். பழைய ஒவ்வொரு சந்தாதாரர்க்கும் உரிய சந்தா நம்பர் ஒவ்வொரு மாதத்திலும் வரும் சஞ்சிகையின் மேல் உறையில் வலதுபக்கத்தில் எழுதப்பட்டிருக்கும். சந்தா நம்பர் எழுதுவோர் அதைப்பார்த்துக் கடிதங்கள், மணியார்டர் முதலியவற்றில் எழுதவும்; மேல் உறையின் இடப்பக்கத்தில் 1190 என்ற ரிஜிஸ்டர் நெம்பர் அச்சிடப்பட்டிருக்கும். அதை எழுதக்கூடாது. மேலே குறித்தபடி கையால் எழுதப்பட்டிருப்பதையே குறித்தெழுதவேண்டும். பழைய சந்தாதாரர்களில் சந்தா நெம்பர் தெரியாதவர்கள் முன்பண மனுப்பாமல் வி. பி. யிலேயே சஞ்சிகை பெற்றுக்கொள்வது நலம்.

பழைய சந்தாதாரர்களில் சஞ்சிகையை நிறுத்திவிடும்படி எழுதுவோரும் மேற்குறித்தபடி தங்கள் சந்தா நம்பரைக் குறித்தெழுதவேண்டும்.

ப-ர்.

---



ஆரியசித்தாந்தம்.

## உலக ஞானம்.

(522-ம் பக்கத் தொடர்ச்சி.)

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்)

நல்லவர்களால் மரியாதை செய்யப்பட்டுக் கர்வத்தை விட்டொழித்துத் தன் சக்திக்கேற்றபடி முயற்சி செய்கிறவன் நல்லமனிதனும். அவன் சீக்கிரத்தில் கீர்த்தியை அடைவான். ஏன் என்றால் நல்லவர்கள் மகிழ்ச்சியை அடைந்தால் ஒருவனுக்குச் சுகத்தைக் கொடுக்கச் சக்தியுள்ளவர்களாயிருக்கிறார்கள். நீதியற்ற தன் எண்ணம் பெரிதாயிருந்தாலும் அதை விட்டு விடுகிறவன் சட்டையை யுரித்துவிட்ட பாம்பைப் போலப் பகைவர்களைத் தொலைத்துவிட்டுச் சுகத்தை அனுபவிப்பான். அசத்தியத்தால் பெற்ற ஜயம், அரசனிடத்தில் வஞ்சனையாக நடத்தல், குருவினிடத்தில் வஞ்சனையாகப் பேசுதல், இந்த மூன்றும் பிரமஹத்திக்குச் சமானமாகும். அதிகபகை, மரணம், தற்புகழ்ச்சியிவை மூன்றும் ஐசுவரியத்தை அழிக்கும் ஆயுதமாம். குருவைச் சேவிப்பதில் அஜாக்கிரதை, அவசரம், தற்புகழ்ச்சி யிம் மூன்றும் அறிவுக்குச் சத்துரு. சோம்பல், கவனியாமை, புத்திமயக்கம், சாந்தியின்மை, கூட்டம்கூடி வீண்காலம் போக்குதல், கொடுமை, பேராசை, இந்த ஏழும் கல்வி கற்கிற மாணுக்கர்களுக்குக் குற்றங்களாம். இன்பத்தை விரும்புகிறவன் ஞானத்தை அடையமாட்டான். கல்வி பயிலும் மாணுக்கன் இன்பத்தில் மனம் செலுத்தக்கூடாது. இன்பத்தை விரும்புகிறவன் ஞானத்தை விடவேண்டும். ஞானத்தை விரும்புகிறவன் இன்பத்தை விட வேண்டும். நெருப்பு விறகினால் திருப்தியடைவதில்லை. ஏனென்றால் நெருப்பு எவ்வளவு விறகானாலும் எரித்துவிடும் சக்தியை யுடையது. சமுத்திரம் ஆறுகளால் திருப்தி யடையாது. எமன் சகல பிராணிகளையும் அழித்து விட்டாலும் திருப்தி அடைய மாட்டான். அழகான ஸ்திரீ எத்தனை புருஷர்களை அடைந்தாலும் திருப்தி அடைவதில்லை.

எண்ணமானது பொறுமையை அழிக்கிறது. எமன் விருத்தியை அழிக்கிறான். கோபம் ஐசுவரியத்தை அழிக்கிறது. கோபகுணம் கீர்த்தியை அழிக்கிறது. பழக்கமில்லாமை பசுக்களை அழிக்கிறது. கோபங்கொண்ட பிராமணன் கிராமமுழுமையும் அழித்துவிடுவான். ஆடுகள், வெண்கலம், வெள்ளி, தேன், விஷத்தை நீக்கும் ஔஷதங்கள், பட்சிகள், வேதம் உணர்ந்த பிராமணர்கள், பழைய உறவினர், உயர் குலத்தில் பிறந்து தரித்திரம் அடைந்தவர்கள் இவர்கள் எல்லாரையும் அரசன் ஆதரிக்க வேண்டும்.

ஆடுகள், ரிஷபங்கள், சந்தனக்கட்டைகள், வீணை, கண்ணாடி, தேன், நெய், இரும்பு, செம்பு, சங்கம், சாளக்கிராமம், கோரோசனை யிவைகள் மங்களகரமான வஸ்துக்கள் என்றும், இவைகள் தேவர்கள் பிராமணர்கள் அதிதிகள் இவர்களைப் பூஜிப்பதற்காக ஒவ்வொருவர் வீட்டிலும் இருக்க வேண்டுமென்றும் ஸ்மிருதிகள் கூறுகின்றன. பெரும்பயன் தரக்கூடிய

தும், சகல உபதேசங்களுக்கு மேலாயுள்ளதுமான மற்றொன்று சொல்கிறேன். காமத்தினாலாவது பயத்தினாலாவது தூண்டுதலாலாவது ஒருபோதும் தர்மத்தை விடக்கூடாது. தன் ஜீவனைக் காப்பாற்றுவதற்காகக்கூட விடக்கூடாது. தர்மம் நித்தியமானது. இன்ப துன்பங்கள் நிலையற்றன. ஜீவன் நித்தியமானதா யிருந்தாலும், அதன் தோற்றம் அநித்தியமேயாம். நிலையற்றவைகளை விட்டு நித்தியமானதைக் கைப்பற்ற வேண்டும். திருப்தி யடைந்திருக்க வேண்டும். திருப்தி எல்லா ஐசுவரியங்களிலும் மேலானது. கீர்த்தியும் மகிமையு முள்ளவர்களாயிருந்த அரசர்கள் எல்லாரும் இராஜ்யத்தையும் யோகானுபவப் பொருள்களையும் விட்டுவிட்டு இறந்துபோனதை உலகம் அறியும். கவலைப்பட்டுப் புத்திரனை ஜாக்கிரதையாக வளர்க்கிறார்கள். அந்தப் புத்திரன் இறந்துபோனால் அவனைச் சுடுகாட்டுக்குத் தூக்கிக்கொண்டு போய் அங்கே தலைமயிரை விரித்துக்கொண்டு பரிதாபமாய் அழுகிறார்கள். பின் சிதையி லேற்றிச் சுடுகிறார்கள். அந்தச் சரீரத்தை அக்கினியும் பறவைகளும் பட்சிக்கின்றன. அவன் செல்வத்தை மற்றவர்கள் அனுபவிக்கிறார்கள். மனிதன் இறந்தால் அவன் தன் சரீரத்துடன், உறவினர், சினேகிதர் இவர்களை புஷ்பமும் பலமும் இல்லாத மரத்தைப் பட்சிகள் விடுவதுபோல விட்டு விட்டுத் தான் மாத்திரம் தனியாகச் செல்கிறான். தர்மம் ஒன்றே அவனைப் பின் தொடர்ந்து செல்கிறது. ஆகையால் ஜாக்கிரதையாகவும் கொஞ்சங் கொஞ்சமாகவும் தர்மத்தைச் செய்ய வேண்டும். இவ்வுலகத்திற்கு மேலும், கீழ்ப்புறமும் மேற்புறமும் இருளடைந்த உலகங்களிருக்கின்றன. இவ்வுலகங்களில் மனிதர்களுடைய இந்திரியங்கள் மிகுந்த துன்பத்தையே யடைகின்றன. மனிதன் இந்த உலகங்களை அடையாமலிருக்க வேண்டும். இப்பொழுது சொன்னவைகளை மனதில் வைத்துக் கொண்டு கவனமாய்ச் சிந்தித்து ஜாக்கிரதையாக நடக்கிறவன் இந்த உலகத்திலும் மறு உலகத்திலும் சிறப்பாக வாழ்ந்து சுகப்படுவான். கவனியாதவன் நிச்சயமாகவே முற்கூறிய இருளுலகத்தில் துன்பப்படுவான்.

ஆத்மாவே நதி. சத்தியமே அந்த நதியின் ஜலம். தர்மமே ஸ்நானம். புலனடக்கமே அந்நதியின் கரை. ஆசையே அலைகள். தார்மிகன் அதில் ஸ்நானம் பண்ணிப் பரிசுத்தனாகிறான். ஆத்மா பரிசுத்தமானது. இச்சையில்லாமலிருப்பதே சிறந்த தர்மம். ஜீவிய காலமே ஒரு ஆறு. பஞ்சேந்திரியங்களே அதன் ஜலம். காமமே முதலை. கோபமே திமிங்கிலம். தன்னடக்கமே படகு. அந்தப் படகின் மேலேறியே பிறவிகளாகிய அலைகளை யுடைய அந்த நதியைக்கடக்க வேண்டும். அறிவிற் சிறந்தவர்களும், தார்மிகர்களும், படித்தவர்களும், வயதில் பெரியவர்களும் சிநேக குண முள்ளவர்களுமானவர்களைப் பணிந்து, சினேகிக்கிற சினேகிதர்களை உபசரித்துத் திருப்தி செய்வித்துச், செய்யத்தக்கவைகளும் செய்யத் தகாதவைகளுமானவைகளை அவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொண்டு நடக்கிறவன் தன் காரியங்களில் ஒருபோதும் தவறுதல் அடையான்.

பொறுமையினால் வயிற்றையும் காமத்தையும் அடக்கவேண்டும். கண்களாலே கைகளையும் கால்களையும் அடக்கவேண்டும். மனதினாலே கண்களையும் காதுகளையும் அடக்கவேண்டும். மனதையும் பேச்சையும் கல்வியாலே யடக்க வேண்டும். தவறாமல் ஓமம் செய்கிறவனும், எப்போதும் உபவீதம் தரித்திருப்பவனும், எப்போதும் வேதாத்தியயனம் செய்பவனும், பாவிகள் அன்னத்தைப் புசியாதவனும், சத்தியத்தைப் பேசுகிறவனும், குருபணி விடைக

ளைத் தவறாமல் செய்கிறவனுமான பிராமணன் எப்போதும் பிரமலோகத்தில் வசிப்பான். வேதத்தை அத்தியயனம் செய்தவனும், யாகம் செய்கிறவனும், குடிகளைக் காப்பாற்றுகிறவனும், பசுக்களையும் பிராமணர்களையும் காப்பாற்று கிறதற்காக ஆயுதமெடுத்து யுத்தம் செய்து பரிசுத்தனை யிருக்கிறவனும் தன் குடிகளைக் காப்பாற்றுகிறவனும், யுத்தத்தில் ஜீவனை விடுகிறவனுமான க்ஷத் திரியன் சொர்க்கத்தை அடைவான். வேதாத்தியயனம் செய்து சரியான காலத்தில் தன்செல்வத்தை க்ஷத்திரியர்களுக்கும் அந்தணர்களுக்கும் பகிர்ந்து கொடுத்து, மூன்றுவகையான அக்கினிகளின் புகையை முகர்கிற வைசிய னும் சொர்க்கத்தை அடைவான். முதன் மூன்று வருணத்தாரையும் திருப்தி செய்விப்பதினால் தன்பாபங்களைத் தகித்துப் பரிசுத்தனை நாலாம் வருணத்தான் சொர்க்கத்தில் சிறந்த வாழ்வைப் பெறுவான். நாலு வருணத்தாருடைய தொழில்களும் முன்னாலே சொல்லப்பட்டன.

அரசனே! கலியுகத்தில் சகல தர்மங்களும் மாறுமென்று நூல்கள் கூறுகின்றன. யுகம் மாறுதலாவது அரசனுடைய செங்கோலின் மாறுதலே யாம். அதனால் அரசனானவன் யுகங்களுக்கும் காரணமாக விருக்கிறான். அரசன் தானும் தர்மங்களைச் செய்து, குடிகளையும் தர்மநெறியில் ஒழுகச்செய்து, பட்சபாதக மின்றி நீதி செலுத்தினால் அதுவே கிருதயுக திரேதாயுகங்களாம். குடிகளைப் பரிபாலியாமலும், தர்மங்களை அனுஷ்டியாமலும், அதர்மத்திலும் அநீதியிலும் மனதைச் செலுத்தித் தன்மனம்போன வழியிலே நடக்கிற அரசனாலே கலியுகம் உண்டாகிறது. ஆகையாலே அரசனுடைய நடக்கையி னாலேயே நாலுவகை யுகங்களும் உண்டாகின்றன வென்று தெரிந்து கொள் ளும். அரசனே உமது செய்கைகள் கலியை அழைக்கின்றன.

அரசனே! இதுகாறும் நமது முன்னோர்களாகிய மகரிஷிகளும், இராஜ ரிஷிகளும் அனுஷ்டித்து வந்ததும் சாஸ்திரங்களினால் புகழ்ந்து சொல்லப் பட்டவைகளுமான நீதி நியாயங்களாகிய உலகஞானத்தைச் சொன்னேன். இதன்படி நடந்து பாண்டவர்களுக்கு அவர்களுடைய பாகத்தைப் பகிர்ந்து கொடுத்து, மற்றப்பாதியை நீர் கைக்கொண்டு சுகமாய் அரசுபுரிய வேண்டு மென்பது என்கருத்து. இதற்குமாறாக நடந்தால் பாவமும் பழியும், மானக் கேடும் உண்டாகும். உமது பெருமை கெடுவது மல்லாமல் புதன்முதலாக நடைபெற்று வாழையடி வாழையாக விருத்தியாய் வருகிற நமது சந்திரவம் சத்துக்கும் இழிவுண்டாகும். உய்த்து நோக்கும்போது உமக்கு இராஜ் யமேயில்லை. எல்லாம் பாண்டவர்களுக்கே சொந்தம். அவர்கள் பிதிரார் ஜித முறைப்படி தங்கள் இராஜ்யத்தை அடைந்தார்கள். பிறகு தங்க ளுடைய புஜபலத்தாலே பூமிமுழுவதையும் ஜயித்துத் தங்களுக்கு அடங்கி யிருக்கச் செய்து கொண்டு சக்கிரவர்த்தி யானார்கள். அவர்கள் தர்மத்தினா லும் புஜபலத்தினாலும் அடைந்த இராஜ்யத்தை வஞ்சனையான சூதாட்டத் தால் அபகரித்துக்கொண்டு பன்னிரண்டு வருஷம் வனவாசமும ஒரு வரு ஷம் அக்ஞாத வாசமும் செய்துவந்தால் உங்கள் பாகத்தை நீங்கள் அடை வீர்களென்று நீர்கூறினீர். அவர்கள் தங்கள் பிரதிக்ஞையை நிறைவேற்றி வந்த பின்னும் நீர் அவர்கள் பாகத்தைக் கொடாமலிருக்கிறீர். இது சரி யல்ல. தர்மப்படி நியாயத்தைச் செய்து சுகப்படும்.

அரசன், விதுரா! எல்லாரும் கலிகாலம் என்பதை நிந்தித்துக் கூறு கிறார்கள். அது ஏன்? அப்போது என்னென்ன சம்பவிக்கும். அந்த விசேஷங்

களை அறிந்தபடி சொல், நான் கேட்க விரும்புகிறேன். அது பிறவாம லிருக்கும் போதே உலகம் சீர்குலைந்து இந்தப்பாடு படுகிறது. பிறந்து விட்டால் எப்படியாம் சொல் என்று கேட்டான். அப்போது உலகம் அழியுமாமே அது என் என்றான். விதுரர் மஹாராஜாவே! இது கேட்கத் தக்கதுதான். இந்த விஷயத்தை நான் மார்க்கண்டேயரைக் கேட்டுத் தெரிந்து கொண்டேன், அதைச் சொல்கிறேன்.

சில வருஷங்களுக்கு முன்னால் நான் இமயச் சாரலில் தவ தியானத்தி லிருந்தேன். அப்போது மார்க்கண்டேய முனிவர் என்னிடம் வந்தார். நான் அவருக்கு வந்தனை வழிபாடு செய்து உபசரித்து முனிவரே! நீர் உமா காந்தனைப் பூசித்து எமனை வென்று நெடுங்காலமாக ஜீவித்துவருகிறீர். அநேகமாயிர வருஷங்களைக் கண்டிருக்கிறீர். உம்மைப்போல் நெடுங்காலமாக வசித்திருப்பவர் ஒருவருமில்லை. இந்த விஷயத்தில் பிரமாவைத் தவிர உமக்கு ஒப்புச் சொல்லத் தக்கவர்கள் ஒருவருமில்லை. பிராமணரே! பூமி ஆகாயம் தேவர் தானவர் ஒருவருமில்லாத சங்கார காலத்தில் நீர்மாத்திரம் பிரமத்தைத் தொழுது இருக்கிறீர். பிரளயம் நீங்கிப் பிரமா விழித்துக் கொண்டு திக்குகளை உண்டாக்கிக் காற்றால் நிரப்பி, ஜலத்தை சரியான ஸ்திதியில் நிறுத்தி, நாலு வருணங்களையும் மறுபடி சிருஷ்டித்த போதும் நீர் ஒருவரே அந்தப் பிர்மாவைத் தரிசித்திருக்கிறீர். உக்கிரமான தவசினாலே மறு உலகத்தில் நாராயணனைப்போல இவ்வுலகத்தில் நீர்பிரகாசிக்கிறீர். பரமசிவனுடைய கருணையால் மரணத்தையும் பிறப்பையும் வென்று விளங்குகிறீர். சந்திரன் சூரியன் பூமி அக்கினி வாயு இவை ஒன்றுமில்லாமல் இருந்த போதும் நீர்மாத்திரம் பிரம தரிசனம் செய்துகொண்டிருந்தீர். உமக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. ஆகையால் வரும் கலியுகவிசேஷங்களை நான் நன்றாகத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன் என்று பணிவுடன் கேட்டேன்.

முனிவர், சம்பு நாராயணன் என்று பேர்கொண்ட ஒருவனே நித்தியன். அவனே எல்லாவற்றையும் சிருஷ்டிக்கிறான், அழிக்கிறான். யுகங்கள் நாலு. இவற்றுக்குச் சதுர்யுகம் என்றுபேர். இவை தேவ வருஷத்தால் பன்னீராயிர வருஷங்கள் கொண்டன. கடைசி யுக முடிவில் எல்லாந் தலைதடுமாறும். அப்போது மனிதர்கள் எல்லாரும் பொய்யரா யிருப்பார்கள். உபதேசக் கிரமத்தில் சீர்திருத்தப்பட்டு நாலு வருணங்களும் கொஞ்சகாலம் கிரமமாய் நடக்கும். யாகங்களையும் தானங்களையும் செய்வார்கள். விரதானுஷ்டானங்களையும் செய்வார்கள். பிராமணர்கள் சூத்திரர் நடக்க விதிகளை யேற்படுத்துவார்கள். ஆயினும் சூத்திரர்கள் ஐசுவரியம் சம்பாதிக்கத் தொடங்குவார்கள். க்ஷத்ரியர்களும் பிராமண தர்மங்களைக் கொள்வார்கள். பின் பிராமணர்கள் வேதத்தையும் யாகத்தையும் விடுவார்கள். தண்டத்தையும் மான்தோலையும் ஒழிப்பார்கள். எல்லாவற்றையும் புசிப்பார்கள். ஜபம் செய்யாமல் விட்டு விடுவார்கள். அவற்றைச் சூத்திரர்கள் கைக்கொள்வார்கள். நாளடைவில் உலகநடை மாறிப் போகும். இதுவே உலக முடிவுக்கு அடையாளமாகும். அப்போது அநேக மிலேச்சர்கள் இராஜர்களாவார்கள். இவ்வரசர்கள் பாபிகளாய்ப் பொய் பேசுவார்கள். பொய்யினாலேயே அரசுபுரிவார்கள். அவர்களே தைரியசாலிகளாய் பூமிக்கு அதிபதியாவார்கள். அப்போது ஒரு பிராமணன் கூடத் தன் குலாசார தர்

மத்தை அனுஷ்டிக்க மாட்டான். கலியுக முடிவில் இப்படி யெல்லாம் நடக்கும். இது யுக வலிமையாம். இதனால் பிரஜைகளைக் குற றங்கூறலாகாது.

க்ஷத்திரிய வைசியர்களும் தங்கள் குலாசார நெறிகடந்து மாறாய் நடப்பார்கள். மனிதர்கள் அற்பாயுசு உள்ளவர்களாய் ஊக்கம், பலம், சக்தி இவை குன்றிப் போவார்கள். சரீரம் சிறுத்து அற்ப பலமுள்ளவர்களா யிருப்பார்கள். எல்லாரும் பொய்யர்களாகவே யிருப்பார்கள். துஷ்ட மிருகங்களும் துஷ்ட ஜந்துக்களும் எங்கும் வசிக்கும். அப்போது வேதம் அரிதாய விடும். சூத்திரர்கள் "அடே" என்று அழைப்பார்கள். பிராமணர்கள் "தனமுள்ள ஐயாவே" என்று அழைப்பார்கள். மிருகங்கள் ஏராளமாய் விருத்தியாகும். வாசனைத் திரவியங்கள் நன்மணங்கமழா. பதார்த்தங்கள் உருசிப்பாயிரா, சிறிய சரீரமுள்ள பல புத்திரர்களை ஸ்திரீகள் பெறுவார்கள். அவர்கள் நல்லொழுக்க மில்லாதவர்களாய் நெறிகடந்து நடப்பார்கள். பெண்கள் உலக விவகாரத்தையே பேசுவார்கள். எங்கும் பஞ்சம் உண்டாகும். துர்நடக்கை யுள்ள பெண்கள் தெருவில் உலாவுவார்கள். தங்கள் கணவனைப் பகைப்பார்கள். கற்பையிழந்து விடுவார்கள். பசுக்கள் பால் கறப்பது கொஞ்சமா யிருக்கும். மரங்கள் காக்கைக் கூட்டங்களால் நிறைந்திருக்கும். அவைகள் பலன்களையும் கனிகளையுங் கொடா. பிராமணர்கள் எல்லாரும் பிரமஹத்தி தோஷத்தால் நிறைந்திருப்பார்கள். பொய்யர்களான அரசர்களிடத்தில் தானம் வாங்குவார்கள். பொறாமையும் அறிவின்மையும் உள்ளவர்களா யிருப்பார்கள். மதாசாரத்துக்கு விரோதமான சின்னங்களைத் தரித்துக் கொண்டு பிச்சை யெடுப்பார்கள். குடும்பத்தி லிருப்பவர்கள் வரிகளால் கஷ்டப்பட்டு வஞ்சகர்களாவார்கள். தவத்தை வெறுத்து வர்த்தகத்தால் அந்தணர் பொருள் தேடுவார்கள். ஆசையினால் சந்நியாசி யாவார்கள். அப்படிப்பட்ட காலத்தில் மனிதர்கள் ஆசாரத்துக்கு மாறாகவே நடப்பார்கள்.

ஜனங்கள் மதுபானம் பண்ணுவார்கள். பலாத்காரமாகப் பரதார கமனம் செய்வார்கள். உலக இன்பத்தில் மதிமயங்கிக் கிடப்பார்கள். மாம்சத்தையும் இரத்தத்தையும் விருத்தியாக்குகிற பொருள்களையே தேடுவார்கள். ரிஷிகள் ஆச்சிரமத்தில் பாபிகளும் துஷ்டர்களும் சோம்பேறிகளும் நிறைந்திருப்பார்கள். பிறனைப்பற்றி ஜீவிப்பதையே ஜனங்கள் பெருமையாக நினைப்பார்கள். சரியான காலத்தில மழைபொழியாது. நிலத்தில் விதைகளும் சரியாய் முளையா. மனதாலும் செய்கையாலும் கெடுதியே செய்வார்கள். பகையும் பொறாமையும் உள்ளவர்களா யிருப்பார்கள். உலக முற்றும் பாபங்களும் துன்பங்களும் நிறைந்திருக்கும். துன்மார்க்கமே பரவும். அக்காலத்தில் தர்மிஷ்டன் அற்பாயுசாய் விடுவான். தர்மம் எல்லா விதத்திலும் கெடும். வர்த்தகர்கள் வஞ்சகர்களா யிருப்பார்கள். பண்டங்களைக் குறைவாகவே நிறுத்தும் அளந்தும் கொடுப்பார்கள். தர்மசாலி க்ஷேமத்தை அடைய மாட்டான். பாபியானவன் மிகுந்த செல்வத்துடன் வாழ்ந்திருப்பான். தர்மம் பலஹீனப்படும். பாபம் மஹா பலமுடையதா யிருக்கும். தர்மத்தை அனுசரிக்கிறவன் ஏழையாயும் அற்பாயுசுள்ளவனாயுமிருப்பான். பாபி ஐசுவரியவானாயும் நீண்ட ஆயுசுள்ளவனாயு மிருப்பான். விருந்து முதலிய தர்மங்களில் கூடப் பாபம் கலந்திருக்கும். பாபத்தினாலே மனிதர்கள் தங்கள் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ள முயல்வார்கள். மனிதர்கள் சொற்பப் பணம் சம்பாதித்தாலும் கர்வித்து இறுமாந்திருப்பார்கள். மகா பிரபுக்களைப் போலப் பாசாங்கு செய்வார்கள். தம்மிடத்தில் கொடுத்திருக்கும் பொருளை

அபகரிக்க எவ்வகையிலும் முயலுவார்கள். வெட்கமில்லாமல் வாங்கின பொருளை யில்லையென்று மறுப்பார்கள்.

மாமிச பட்சணிகளான மிருகங்களும் பட்சிகளும் எவ்விடத்திலும் நிறைந்திருக்கும். நகரங்கள் பட்டணங்கள் தேவாலயங்களும் அப்படியே நிறைந்திருக்கும். யுகமுடிவு காலத்தில் ஏழு எட்டுவயதுள்ளவர்கள் குழந்தைகளைப் பெறுவார்கள். பத்து அல்லது பன்னிரண்டு வயதுள்ள ஆண்கள் பிள்ளைகளைப் பெறுவார்கள். பதினாறு வயதில் மனிதர்கள் விருத்தாப்பியத்தை அடைவார்கள். மனிதர்களுடைய ஜீவியகாலம் சீக்கிரத்தில் ஒழிந்து போய்விடும். மனிதர்கள் மிகக் குறைந்த ஆயுசுள்ளவர்களா யிருப்பார்கள். இளமையிலேயே பெரியவர்களைப்போல நடிப்பார்கள். புத்தியும் இளம்புத்தியாகவே யிருக்கும். பெண்கள் கெட்ட நடத்தை யுள்ளவர்களாகவே யிருப்பார்கள். கெட்டபேர் பெற்றுச் சிறப்படைந் திருப்பார்கள். நல்லகுணமுள்ள கணவனுக்கு வஞ்சனை செய்வார்கள். வேலைக்காரர் அடிமைக்காரர் முதலியவர்களிடம் பிரியத்தை வைத்திருப்பார்கள். மிருகங்களையும் கலப்பார்கள். புருஷ னிருக்கும்போதே மறு புருஷனோடு கலந்து உறவாடுவார்கள். யுகமுடிவின் ஆயிர வருஷம் குறைந்த வயதுள்ள மனிதர்களே யிருப்பார்கள். அந்த வருஷமும் அநேக ஆயிர வருஷங்கள்போலத் தோன்றும். பட்டினியாலும் நோயாலும் ஆயிரக் கணக்கான ஜனங்கள் மடிவார்கள்.

அப்போது ஏழு சூரியர்கள் வானத்தில் காணப்படுவார்கள். அவர்கள் தங்களுடைய உக்கிர கிரணங்களால் ஆற்றையும் கடலையும் வற்றச் செய்வார்கள். புல் செடி கொடி மரங்கள் எல்லாம் உலர்ந்து காய்ந்து சாம்பலாய் விடும். பிறகு ஸம்பஸ்தகம் என்னும் நெருப்பு காற்றின் உதவியால் தோன்றும். அக்கினி பற்றி எரிந்து பூமியை ஊடுருவிப் பாதாளத்தை அடையும்.

அதனால் தேவ தானவ அரக்கர்களும் அஞ்சி நடுங்குவார்கள். சகல பொருள்களையும் தகித்துவிடும். மஹா தேஜசுடன் விளங்குகிற அந்த நெருப்பு தேவர், தானவர், அசுரர்கள், இராட்சதர்கள், யட்சர்கள், நாகர்கள் எல்லாரையும் எரித்துவிடும். அதன்பின் கரிய யானைக் கூட்டங்களைப்போல் மேகங்கள் வானத்தில் தோன்றும். அந்த மேகங்கள் மின்னல்களை மாலையாகத் தரித்துக்கொண்டு கண்களுக்கு அழகாய்க் காணப்படும். அந்த மேகங்களில் சில நீலோத்பல மலர்போலவும், சில அல்லி மலர்களைப்போலவும், சில தாமரை நூல்போன்ற நிறமுள்ளவைகளாகவும், சில செந்தாமரைபோலவும் காணப்படும். சில மஞ்சள் நிறமாயிருக்கும். சில காக்கை முட்டைபோன்ற நிறமுள்ளவைகளா யிருக்கும். சில தாமரை யிலைபோன்ற நிற முள்ளவைகளா யிருக்கும். சில ஜாதிலிங்கம்போலச் சிவந்திருக்கும். சில மேகங்கள் நகரங்களைப்போலவும், சில யானைகளைப்போலவும் வடிவுள்ளவைகளா யிருக்கும். சில பல்லிகளைப்போலவும், சில முதலைகளைப்போலவு மிருக்கும். சில சுறாமீன்களைப்போன்றிருக்கும். இப்படிப்பட்ட மேகங்கள் மின்னல்களை மாலைகளாகத் தரித்துக்கொண்டு வானத்தில் பரவிப் பயங்கரமாய்க் கர்ஜிக்கும். சமுத்திரம்போல் வானத்தில் பரவி மழை பொழியும். இது வெகு பயங்கரமா யிருக்கும். அந்தப் பெருமழை வெள்ளம்பெருகிப் பூமி மலைகளையும் மூடும். இந்த வெள்ளத்தால் ஸம்பஸ்தகாக்கினி அணையும். இப்படிப் பன்னிரண்டு வருஷம் மழை பொழியும். பிறகு கடல் கரை கடந்து பெருகும்.

# ஆனந்த சந்திரோதயம்

S. V. V.

(548-ம் பக்கத் தொடர்ச்சி)

"யானை வாயிற் போன கரும்பு திரும்பி வருமா" என்று சாமான்ய மாக நாம் சொல்வதுண்டு. கங்கை, யமுனை, கோதாவரி, சரஸ்வதி, நர்மதை, சிந்து, காவேரி என்னும் சப்தபுண்ய நதிகள் நமது நாட்டிலோடுகின்றன. இவற்றில் நிறைந்து பாயும் புனல் ஸ்நானத்திற்கு உத்தமமானதாயும் பருகுவதற்குப் பரமானந்தமாயும் உள்ளது. ஆனால் இதே தண்ணீர் சமுத்திரத்திற் கலந்த பின்னர் உப்பு நீராக மாறிவிடுகிறது. பின்பு அருந்துவதற்கோ நீராடுவதற்கோ யோக்ய மானதாயில்லை. இதுபோன்றே மனிதன் நற்குண நற் செய்கைகளுடன் பரோபகார சிந்தை யுடையவனாய் சாதுக்களுக்குத் தாஸனாய்த் திகழ்கின்றவரை அவன் பகவானுக்குப் பிரியனாகின்றான். துஷ்ட சகவாசம் செய்து தீய குணமுடையவனாகி விட்டால் சமுத்திர நீரைப் போலப் பிறருடைய ருசிக்கும் உபயோகத்திற்கும் அநருகனாகின்றான். நதியானது தரையிலோடுகிற வரையில் சொரூபம், வளைவு, கிளைநதிகள், நீர் வீழ்ச்சிகள் முதலிய தோற்றங்களைத் தரும். சாதுக்கள் இல்லறத்தை மேற்கொண்டொழுகும் வரை தேகசுகம், தாழ்மை, பொருளீட்டல் முதலிய தோற்றங்களை யுடையவர்களா யிருப்பார்கள்; சிற்றின்பங்களில் பிரியங் கொள்வார்கள். சமுத்திரத்திற் போய்க் கலந்த நதி எவ்வித சொரூபமுமற்றுக் கடலோடு கடலாய்க் கலந்து என்றும் மீளாது போய்விடுகிறதுபோல சாதுக்கள் ஸன்யாஸிகளான பின் சகல இன்பங்களையும் மறந்து விடுகிறார்கள்; என்றும் கிருகஸ்தாஸ்ரமத்திற்குத் திரும்புவதேயில்லை; கடலைப்போன்று பரந்த ஹிருதய முடையவர்களாய்ப் பகவத் குணானுபவத்திற் கலந்து என்றும் வற்றாத தன்மையராய் விளங்குகிறார்கள்.

துர்க்குணம் மனிதனுக்கு மேலிட மேலிட முன்னிருந்த சொற்ப நற்குணங்கூட மறைந்து போய்விடுகிறது. ஒரு குடம் பாலில் ஒருதுளி தண்ணீரை விட்டால் அந்தத் தண்ணீருக்கும் பாலின் தன்மையே உண்டாகிவிடுகிறது. தண்ணீரும் பாலோடுபாலாகித் தனது சொரூபத்தை இழந்து விடுகிறது. அப்பாலிலிருந்து தண்ணீரை மீட்டும் பிரித்துவிட முடியாது. ஒரு குடம் தண்ணீரில் ஒருதுளி பாலைவிட்டால் அத்துளி ஜலத்தின் தன்மையை எய்துகிறது. இதையும் பிரித்து எடுக்க முடியாது. இது வஸ்துக்களுக்குள்ள இயற்கை. ஆகையால், உறவாடிப் பின்பு விடுவதென்பது இயலாத காரியம்; உறவாடாமலிருந்து மேன்மையை யடைவதே சிறந்ததாகும். துட்டர் பழக்கத்தை விட்டு சாதுக்களோடுபழகி, சத்விசாரம் செய்து ஆசைகளை அடக்கி, அகந்தையை ஒடுக்குகின்றவனே பகவானுக்குப் பிரியனாகின்றான்.

*** *** ***

"கூரைமேல் சோற்றைப் போட்டால் எத்தனையோ காக்காய்" முற்காலத்தைப்போல் அதிகாலையில் நீராடி, அனுஷ்டானம் முடித்துப் பூஜை செய்கிறவர்கள் இன்னும் இரண்டொருவர் அத்திப் பூத்ததுபோல் இரண்டொரு குடும்பங்களில் இருப்பார்களானால் அவர்களிடத்தில் ஒரு பழைய வழக்கத்தைக் காணலாம். அதாவது பூஜை முடிந்ததும் பகவானுக்கு ஆராதித்த அன்னத்தில் ஒருபிடி எடுத்துக் காக்காய்க்குக் கூரையின்மேல் போடுத

லென்பது. இதிற் பல ரகஸியங்கள் உண்டு. இதனால் "ஐயமிட்டு உண்" என்னும் முதுமொழி வலியுறுத்தப் படுகின்றது. "தாம் இன்புறுவது உலகு இன்புறக்கண்டு" என்ற பெரு நாவலரின் திருவாய்மொழியும் இதற்குச் சாட்சியா யிருப்பதே காக்கைக்குச் சோற்றைப் போட்டால் அது தான் மட்டும் உண்பதில்லை. 'கா கா' வெனப் பன்முறை கரைந்து தனது சுற்றங்களை யெல்லாம் அழைத்துப் பின்னரே அவற்றுடன் தானும் உண்கின்றது. இந்த சுபாவம் நாய்க்கில்லை. ஒரு எச்சிலையைப் போட்டால் ஒரு நாய்—பலமுள்ளதா யிருந்தால், வேறெந்த நாயையும் அதனருகே வரவிடாமல் குரைத்தும் கடித்தும் தானே அந்த எச்சிலையை உண்ண முயலும். அதனாற்றான் சாப்பிடுவதற்கு முன் காக்கைக்கும் சாப்பிட்டபின் எச்சிலையை நாய்க்கும் போடும்படி பெரியோர் கூறிப் போந்தனர். இப்பொழுது இதிலுள்ள தாரதம்மியம் நமக்கு நன்றாகப் புலப்படுமல்லவா? இருவர் சண்டை போட்டுக் கொள்வதைப் பார்த்து "என் நாய் எச்சிலைக்கு அடித்துக்கொள்வதைப்போல் அடித்துக் கொள்ளுகிறீர்கள்" என்று கேட்பதை நாம் கவனித்திருக்கிறோம். மனிதனுக்கு நற்குணத்தைச் சுபாவத்தில் எந்தெந்த வகைகளில் வளர்க்க முடியுமோ அந்தந்த வகைகளில் பெருக்க வேண்டுமென்பதே நமது பெரியோரின் கொள்கை. காக்கையைப்போல் நாம் பசிப்பிணியால் வருந்தும் அங்க ஹீனர்களுக்கும், சாதுக்களுக்கும் உணவு வழங்கவேண்டும். நாயைப்போல் தானே உண்ணவேண்டும்; தானே இன்பங்களையும் எல்லா நன்மைகளையும் அடையவேண்டு மென்னும் கடைப்பட்ட சுபாவத்தை விடவேண்டும் என்பதும் இதனினின்று போதரும். இது இல்லாசிரமிகளைப் பொறுத்த வரையில் நிற்க,

சாதுக்கள் பகவத் குணங்களைக் கண்டனுபவிக்கிறார்கள். அவர்களுக்கும் இந்த காக்கையை உபமான மாக்கலாம். காக்கை ஓர் தின்பண்டத்தைக் கண்டமாத்திரத்தில் எப்படி காக்கைகளை யெல்லாம் கூவியழைத்து அவற்றோடு தானும் உண்கின்றதோ அதுபோல சாதுக்கள் உணவான பகவத் சேவையை யடைந்தபின் 'கீதம்' பாடுகிறார்கள். கீதம் என்பது தான் கண்ட உண்மைப் பொருளைப்பற்றி ஆனந்தானுபவத்தால் இயற்கையாக எழும் நாத சொரூபமாகும். அந்த அனுபவானந்த கீதத்தால் பக்த கோடிகளையெல்லாம் 'வம்மின்! வம்மின்!!' என்றழைத்து அவர்களோடுகூடி கானம் பண்ணுவது சங்கீதம் அல்லது சங்கீர்த்தனம் எனப்படும். பாருங்கள்! கேவலம் அஃறிணைப் பிராணியான ஒரு காக்கையின் சுபாவத்தைக் கொண்டு எத்தனை உண்மைகளைப் பெரியோர் வகுத்துள்ளார்கள். இதுபோலவே, சற்குண சம்பன்னன் சண்டாள குலத்திலே பிறந்தவனாலும் பக்த கோடிகளால் பூசிக்கப் படுகின்றான். தாழ்ந்த பாணர் வகுப்பைச் சார்ந்த திருப்பாணாழ்வாரையும் கொண்டாடி ஜீயர் அவரைத் தமது தோள்களிலே எழுந்தருளப் பண்ணினார்.

*** *** ***

"மௌனம் சர்வார்த்த சாதகம்" அடியற்ற மரமென்ன அடிவீழ்ந்து 'எமது அடிகளே! உமது அடிமை யாங்கள்'—என்றத் தமது ஸனகாதி யோகிகட்கு, அறமாதி பொருள் வழங்கத் தென்பாலின் முகமாகி வடபாலிருக்கின்ற தெய்வமான தக்ஷிணாமூர்த்தி இந்த மௌனத்தின் பெருமையை உபதேசித்திருக்கிறார். 'சிந்தையை யடக்கியே சும்மா யிருக்கின்ற திறமரிது'

ஆதலின் இம்மோன நிலையை எய்துவது எளிதான காரியமன்று. ஆனால் கண்மூடி மௌனியாகி தனியே யிருக்கும் நிலையை அடைந்தவர்களுடைய ஆனந்தம் எத்திறத்த தென்பதை மட்டும் நாம் ஒருவகையாக ஊகிக்கக்கூடும். ஆனந்தம் என்பது மகிழ்ச்சி அல்லது சந்தோஷமே யாகும். இவ்வானந்தம் கரண இந்திரிய வியாபாரங்களை மெல்ல மெல்லச் சிறிது சிறிதாக விடுவதால் ஏற்படுகிறது. கரண இந்திரிய வியாபாரங்களால் ஆசை அதிகரிக்கின்றது. ஆசையால் விரும்பும் பொருளை யடைய மனிதன் பிரவர்த்தி செய்கிறான். பிரவர்த்தியால் கவலை மிகுகின்றது. பிரவர்த்தியின் தோல்வியால் துக்கம் சம்பவிக்கின்றது. துக்கத்தால் கோபம் உண்டாகிறது; மனம் தளருகின்றது. ஆகவே கரண இந்திரியங்களின் வியாபாரத்தால் இவை யனைத்தும் அடுக்கடுக்காய்ப் பெருகுகின்றன. ஆதலின் கரணங்களை யடக்கவேண்டும். அதனால் மனதைப் பீடிக்கும் கவலைகளனைத்தும் நீங்குகின்றன. மனிதர்களை இருவகையாகப் பிரிப்போம். நல்லோர் தீயவர் ஆகிய இவ்விருதிறத்தாருள் தீயாரின் உறவு கொள்ளாதிருப்பதால் பல துன்பங்களுக்கும் கவலைகளுக்கும் நாம் அடிமையாவதில்லை. துர்ச்சனர் வசிக்கும் இடத்திலும் நாம் இருத்தலாகாது. பாம்போடு பழகினாலும், பாம்பின் உறைவிடமான புற்றண்டை வசித்தாலும் துன்பத்திற்கு இடமுண்டாகும். ஆனதுபற்றி துட்டரைக் கண்டால் தூர விலகிவிடவேண்டும். துஷ்டர் பழக்கத்தை விட்டு நல்லாரோடு பழகுவதால் நமக்கு முன்னிருந்த கவலைகள் அநேகமாக நீங்குவதோடு நன்மையும் உண்டாகிறது. நன்மையாவது சுகம்; அதாவது கஷ்டமும்—துன்பமும் இன்றியிருத்தல். சுமையைத் தலையில் தூக்கிக் கொண்டு நிற்பவன் அதை இறக்கிய பின் 'அப்பாடி' என்கிறான். இதனால் கவலையாகிய கஷ்டம் நீங்கியிருப்பதே சுகமென்று விளங்கும். ஆகவே நல்லாருறவு வேண்டுமென்பதாயிற்று. இந்நல்லார் உறவிலும் விவேகிகளோடு மட்டும் நெருங்கிப் பழகுவதென்றும், மற்றவர்களோடு அதிகப் பேச்சும் பழக்கமும் வைத்துக் கொள்ளாதிருப்பது என்றும் ஒரு வழக்கத்தை மேற்கொண்டு பார்ப்போம். இதனால் இன்னும் ஆனந்தம் அதிகரிக்கின்றது. யார் யார் எதைப் பேசினாலும் அவற்றை எல்லாம் கேட்டுக்கொண்டு, யுக்தமாக, இரண்டொரு வார்த்தைகளில், தேவையானால், நம்மை அவர்கள் மதித்துக் கேட்டால் மட்டில் அவர்களுக்கு விடையளிக்கும் பழக்கத்தை அனுஷ்டித்தால் பின்னும் அதிக ஆனந்தம் உண்டாகிறது. அதிகமாகப் பேசுகிறவனை வாயாடி என்றிகழ்கிறார்கள்; தன் வாய்ச்சொல்லே தனக்குத் துன்பத்தை விளைவிக்கின்றது. இப்படி மௌனத்தை யனுஷ்டித்து வருவதால் ஆனந்தம் மிகுவதோடு பந்தம் ஒழிகின்றதென்றால் தனிமை-மௌனம் ஆகியவற்றால் எத்தனை ஆனந்தம் உண்டாகுமென்பதை நாம் ஊகிக்கலாம். "இனிது இனிது ஏகாந்தமினிது" என்னும் ஔவையின் வாக்கு இதையே நிலைநாட்டுகின்றது. ஏகாந்தத்தோடு கூடிய மௌனத்துடன் சகல வஸ்துக்களையும் பிரம்ம சொரூப மென்று அறிதல் அளவற்ற ஆனந்தத்தை விளைவிக்கின்றது. இதுவே பிரம்மானந்த மாகும்.

* * *

"பொறுத்தவர் பூமி யாள்வார்" இகத்தில் இடையூறின்றி வாழவும் பரலோக சாதனங்களைத் தேடிக் கொள்ளவும் ஒருவனுக்குப் பொறுமையே சிறந்த பூஷணமா யிருக்கின்றது. பிறர் நம்மை நிந்திக்குமிடத்து நாம் பொறுமையா யிருத்தல் நன்று. பெரியோர் நம்மை நிந்திக்குங்கால் அதற்காக

வெகுளாமல் நம்மிடமுள்ள குறைகளை யாராய்ந்து நம்மை நாமே திருத்த முயலவேண்டும்; அங்ஙனம் நாம் திருந்துவதற்கு ஆஸ்பதராயிருந்த அப்பெரியாரைப் போற்றவேண்டும். நம்மைவிடத் தாழ்ந்தவர்கள் நம்மை நிந்தித்தால் அதை நாம் பாராட்டாமலும் அவர்களுக்கு மறுமொழி புகலாமலும் இருத்தலே நன்மை பயக்கும். நமக்குச் சமானமானவர்கள் நம்மை நிந்திப்பார்களாயின் தக்க சமாதானங் கூறி அவர்களைச் சாந்தப்படுத்தி விடவேண்டும். இப்படி மூன்று வகையினரிடத்தும் நடந்துகொள்வதில் இன்சொல் மிகுந்திருக்க வேண்டும். இந்த நீதிகளனைத்தும் இல்லாசிரமிகள் அதாவது லௌகிகர்களுக்கேயாகும். ஞானிகளும் சாதுக்களும் தமக்குத் தாழ்ந்த வர்களாயினுஞ் சரி, சமானமானவர்களா யிருப்பினுஞ் சரி எவர் என்ன சொன்னாலும் அவர்கள் அதைப் பாராட்டமாட்டார்கள். கங்காநதி மிக்க பரிசுத்த முடையதென்பதில் ஐயமில்லை. அதனிடத்தில் எத்தனையோ சிற்றாறுகள் வந்து கலப்பதுடன் சாக்கடைகளும் வந்து சேருகின்றன. கங்காநதி சாக்கடையையும் ஏற்றுக் கொள்ளுகிறது. அது போல் ஞானிகள் எவருடைய நிந்தனையையும் பாராட்டுகிறதில்லை. தர்ம புத்திரருக்குப் பொறை வேந்தன் என்ற ஒரு பெயருண்டு. மகாபாரதத்துள் தருமர் சத்யமான வழியில் பொறுமைக்கு ஓர் நல்ல உதாரணமாக விளங்கினர். 'பொறுத்தவர் பூமி யாள்வார்' என்ற பழமொழி அம்மகானுபாவரின் சரித்திரத்தில் நிதரிசனமாக விளங்குகிறது. பொறுமை யுடையவன் பகவானைத் தேட வேண்டியதில்லை, பகவான் அவனைத் தேடிக் கொண்டு வருகிறார். இதுவும் பாரதத்தால் நன்கு விளங்கும்.

## ஒரு விநோதம்.

### செவிட்டுத் தாத்தாவும் விளையாட்டுப் பேரனும்.

பேரன்:—*தாத்தா! நம்முடைய நிலத்தை ஏலம் போடப் போகின்றார்களாம்.*

தாத்தா :—*(காதை பேரன் வாய்க்கு நேராக வைத்துக் கொண்டு) என்ன! என்ன! நன்றாகச் சொல்லு.*

பேரன் :—*நிலம்—*

தாத்தா :—*ஆமா!*

பேரன் :—*ஏலம் போடுகிறார்களாம்.*

தாத்தா :—*சரிதான்; சென்ற வருடம் சோளம் போட்டார்கள். அதில் அவ்வளவு பலன் இல்லைபோலிருக்கிறது! இந்த வருடம் ஏலம் போட்டுப் பார்க்கட்டும்.*




# ஸ்ரீயுத, பண்டித மோதிலால் நேரு.

S. V. V.

1. மானிடராய்ப் பிறந்தார் அனைவருக்கும் இன்றியமையாதது சேவை. சேவை புரிபவன் சேவகன். சேவையை ஏற்பவன் சேவ்யன். சேவைக்கு வேண்டுவது தியாகம். தியாக பத்தியை யளிப்பவை அஞ்சாமையும், அறிவு வன்மையும், ஆசையின்மையுமாம். சேவை யென்றாலும், வழிபாடென்றாலும் ஒன்றேயாம். இவ்வழிபாட்டிற் சிறந்தது தெய்வ வழிபாடு. அதனிலும் மேன்மையானது மக்களின் நலம் பேணல். பல ஜீவகோடிகளின் நன்மையை நாடுவது ஜனசேவை யாதலின் தன் முத்திக்கே செய்யப்படும் பகவத் சேவையை விட ஜன சேவை சிறந்ததாம். எந்த சேவை யானாலும் சரி—அதற்குத் திரிகரண சுத்தி வேண்டுவதவசியம். சித்த சுத்தி யேற்பட்டால் சேவ்யனை பகவான் நமது சேவகனாகி விடுகின்றான். அதனாற்றான் ராமதாஸரின் சேவகர்கள் என்று சொல்லிக்கொண்டு ஸ்ரீராம லக்ஷ்மணர்கள் தானிஷாவைக் கண்டார்கள். சித்த சுத்தியால் மனம் அடங்குகிறது; அதாவது ஜீவாத்மா தனது உண்மையான நிலையை யறிகின்றது. ஆன்மா தன்னைத்தானே அறிதலே மோக்ஷ நிலையாகும். அதையே மேல் நாட்டார் (Self realisation) என்பர். இப்பேர்ப்பட்ட ஆத்ம சொரூபத்தை யறிந்த மகான்கள் உலகில் தோன்றித் திகழ்வது வெகு அரிதேயானாலும் நமது நாட்டில் அபூர்வமல்ல; எத்தனையோ பேர். முற்காலங்களில் அரசர்களும், அவர்களுடைய மதமும், மக்களும், அவர்களுடைய சமயமும் ஒன்றாயிருந்தமை பற்றி நமது நாட்டில் தேசசேவை என்ற ஓர் தனியான பிரிவு இல்லை. தோன்றிய மகான்கள் சமய சேவையைப் பெரிதும் புரிந்து வந்தனரேனும் அதனால் தேசிய ஜனசார சீர்திருத்தங்களும் விளைந்தன. ஆனால் சென்ற சில நூற்றாண்டுகளாக ஆட்சியாளரின் மதமும் நாகரீகமும், கொள்கையும் மக்களுடையதினின்றும் வேறுபாடுடையனவாக மாறவே, மத சேவை, சமூகசேவை, தேசசேவை என்னும் பலதுறைத் தொண்டு அத்யாவசியமாயிற்று. மதசேவையை சமீப காலத்தில் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தார் தொடங்கினர். சமூக சேவையை மகோன்னதமாக ஸ்ரீகேசப் சந்திர சேனர் ஆரம்பித்தார். தேசசேவையைத் தீரமாய்த் தாதாபாய் நௌரோஜி தோற்றுவித்தார். உழைப்பிற்குத் தக்க ஊதிய முண்டாதலின் அவரவர் சேவைக்குத் தக்க பயனும் விளைந்தது. தேசத் தொண்டைப் பல பெரியார்கள் பின்பற்றினர். அவர்களுள் தாதாபாய் நௌரோஜி காங்கிரஸ் மகா சபையின் வாயிலாகத் தொடங்கிய மதசேவையைத் தொடர்ந்து நடத்தும் பெரியோருள் சிறந்தவர்களுள் பண்டித மோதிலால் நேருவும் ஒருவர்.

2. இப்பெரியார் காஷ்மீர தேசத்தைச் சார்ந்த சாஸ்வதீய பிராமண வகுப்பினர். டில்லிமா நகரில் 1861-ம் ஆண்டு மே மீ பிறந்தார். அவர் பிறப்பதற்கு முன்பே அவருடைய தந்தை மரித்தார். தந்தையின் மரணத்திற்குப் பின் 'ஜ்யேஷ்டப்ராதா பிதுஸ்ஸம:' என்பதற்கேற்ப தமது முன்

ரேன்றலும், டில்லியில் பிரபல நியாயவாதியா யிருந்தவருமான பண்டித நந்தலால் நேரு அவர்கள் ஆதரவில் கல்வி பயின்று வந்தார். 'மக்தாப்' என்னும் முகம்மதியப் பாடசாலையில் மோதிலால் தமது பன்னிரண்டாம் பிராயம் வரையில் கல்வி பயின்று பாரசீக அராபிய பாஷைகளை நன்கு கற்றுக்கொண்டார். பின்பு, கான்பூர் உயர்தரக் கலாசாலையிற் சேர்ந்து பிரவேசப் பரீக்ஷையில் முதல் வகுப்பிற்றேறினர். அதன் மேல், அலகபாத் மூர் காலேஜில் சேர்ந்து உயர்தரக் கல்வி பயின்று வரும் நாளில் அக்கலா சாலையின் தலைமைப் போதகாசிரியரான ஹாரிஸன் துரையவர்கள் நேரு விடத்தில் விசேஷ அன்புடையவரானர். பண்டித மதனமோகன மாளவியாவும் நேருவும் அக்கலாசாலையில் சேர்ந்து வாசித்தார்கள். நியாய வாதத் தொழிலிற் பிரவேசிக்க நேருவுக்கு அதிக ஆவலிருந்தமையால் அவர் கலா குமாரப் பரீக்ஷைக்கு வாசிக்க வேண்டிய அவசியமில்லாமற் போயிற்று. அக்காலத்தில் 'ஹைகோர்ட் லா பரீக்ஷை' யென்று ஒரு தேர்வுண்டு. அதில் நேரு விசேஷாம்சத்தோடு தேர்ந்தார்.

3. சட்டப்பரீக்ஷை முடிவானபின் நேரு கான்பூரிலேயே குடியேறி நியாயவாதத் தொழிலை மேற்கொண்டார். மூன்றுண்டுகட்குள் அவருக்கு நல்ல கீர்த்தி ஏற்பட்டுவிட்டது. பாடுபட்டவன் பயனடைவது திண்ணம். அந்நகரில் நியாயவாதம் செய்வாருடன் நேரு சேர்ந்து அவர்களுடைய பேராதரவால் 'ஹைகோர்ட்' நியாய வாதிகளில் முக்கியஸ்தராக கருதப்பட்டு வந்தார். இவருடைய நியாய சேவகத்தின் உயர்வு அவர் ஒத்துழையாமை இயக்கத்திற் சேர்ந்து தமது தொழிலை நிறுத்திய பொழுது மிகவும் உணரப் பட்டது. வெகு சீக்கிரத்தில் வடநாட்டிலுள்ள ஹைகோர்ட்டுகளிலெல்லாம் அவர் தோன்றி அரிய பெரிய வழக்குகளை மேற்கொண்டு நடத்தி வெற்றி யடைந்தார். ஒத்துழையாமை இயக்கத்தின் தொடக்கத்திற்கு முன்பும் மோதிலால் தேசசேவையில் கூர்ந்த ஆர்வங்காட்டி வந்தார். மக்களுக்குத் தத்தம் குறைகளை அச்சமின்றி எடுத்தோதும் உரிமை உண்டென்றும், பத்திரிகைகளின் உரிமை பொது ஜனங்களின் குறைகளை விவரிக்கக்கூடிய நிலையை யடைய வேண்டிய தவசியமென்றும் நேரு அஞ்சாது போராடி வந்தார்.

4. 'ஹோம் ரூல்' என்னும் சுயாட்சி இயக்கந் தொடங்கிய காலந் தொட்டு நேருவின் தேசசேவையை இரண்டு பாகமாக பாகுபடுத்தலாம். காங்கிரஸ் மகாசபையின் ஆரம்ப காலத்திலேயே நேரு அதன் வகுப்பினராய் உழைத்து 1907-ல் முதல் அலகபாத் மாகாண மகா நாட்டிற்குத் தலைமை வகித்தார். அதுமுதல் அவருடைய தியாக சஹிதமான சேவை நிறைந்துள்ள சந்திரனை யொத்து கலையிலும் எழிலிலும் வளர்ந்து வந்தது. 1816-ல் 'ஹோம் ரூல்' இயக்கம் வெகு பலமாய் ஆரம்பமாகவும், துரைத்தனத்தார் பலவித அடக்குமுறைகளைக் கையாண்டு வரவும், இந்திய தேசீய இயக்கம் புத்துயிர் பெற்றெழுந்தபொழுது நேரு மிதவாதியாகவே இருந்தார். அரசாங்கத்தாரின் அடக்குமுறை அவருக்கு அதிருப்திகரமாயிருந்தமையால் அவர் தேசீயக் கக்ஷியிற் சேர்ந்தார்; அம்மாகாணம் அவரைத் தனது ஒப்பற்றத் தலைவராகக் கொண்டது; மாகாண மகா நாட்டிற்குத் தலைமை வகித்து நேரு செய்த பிரசங்கத்தை பயோனிர் (Pioneer) பத்திரிகை போற்றி 'தேசீய இயக்கத்தின் கர்த்தர்' என்றப் பட்டப் பெயரிட்டது. சுதந்திரன் (Independent) என்ற தேசீய தினசரிப் பத்திரிகா பரிபாலர்களுள் நேரு ஒருவராகி அதன்

முன்னேற்றசசைதக் கருதி விஷய நன்மை புரிந்தும், இந்தியாவின் அமைதியான மேன்மைக்குரிய முறைகளை விளங்க உரைத்து வந்தார்.

5. தேசீய இயக்கம் இங்ஙனம் நாடெங்கும் பரவிப் பட்டிக் காட்டார் வரை 'ஹோம் ரூல்' என்று பிரபலமாய்க் கூறநேர்ந்த அக்காலத்தில், அரசாங்கத்தார் அடக்குமுறைகளைக் கையாண்டுவந்தது நல்லெண்ணத்தோடேயே என்றும் இந்தியாவின் பரிபாலன விஷயத்தில் சிரத்தையோடு தக்க சீர்திருத்தங்கள் செய்யப்படுமென்றும் இந்தியா பரிபாலன சங்கத்தின் காரியதரிசி (Secretary of State for India) அறிக்கை யொன்று வெளியிடப் பெருந் தலைவர்களான டாக்டர் சப்ரூ, சிந்தாமணி, பாபு சுரேந்திரநாத் பானர்ஜி முதலியோர் அரசாங்கத்தாரை ஆதரிக்கத் தொடங்கினர். டாக்டர் பெஸண்ட் அம்மையும் அவர்களோடு 'மாண்ட்போர்ட்' சீர்திருத்தங்களைப் போற்றலுற்றார். பாஞ்சால நாட்டின் பரிதாபகரமான நிகழ்ச்சிகள் நேருவின் தேசபக்தியைத் தூண்டி, பிற்காலத்தில் 1918-ம் ஆண்டில் ஒத்துழையாமை இயக்கமும் சாத்வீக எதிர்ப்பும் தொடங்கிய பொழுது அவரைத் தேசப்பிரசித்தராக்கிவிட்டன. ஒத்துழையாமை இயக்கத்தில் நேரு சேருவதன்முன் அவர் புரிந்த கைங்கரியங்கள் பல. ஐக்கிய மாகாணக் கமிட்டியின் தலைவராக ஏழாண்டுகளும், முதல் மாகாண மகாநாட்டின் அக்கிராசனராக ஒரு முறையும் அவர் நியமிக்கப்பெற்றதே இதற்குச் சான்று பகரும். 'மார்லி மின்டோ' சீர்திருத்த காலத்திலிருந்து நேரு ஐக்கிய மாகாண சட்ட சபையின் அங்கத்தினராக நியமனம் பெற்றிருந்தார். அக்காலத்தில் சட்ட சபையில் நிறைவேற்றப்படும் தீர்மானங்களனைத்தையும் நேரு நன்றாகப் பரிசீலனை செய்து, மக்களுடைய சௌகரியத்திற்கு ஏற்றவற்றை அங்கீகரித்து, பாதகாம்சமாக ஏதேனுமிருக்குமேல் அவற்றைக் களைய முடிவுவரையில் எதிர்ப்பது வழக்கம். துரைத்தனத்தார் அரசாங்கத்தைப் பல சாகைகளாகப் பிரித்தாளும் தன்மையை, நேரு பாஞ்சால நிகழ்ச்சியையும், கிலாபத் கேள்வியையும் முன்னிட்டுக்கொண்டு சீர்திருத்தங்கள் செய்யவேண்டுவது அவசியமென்று போராடி வந்தார். நேருவின் முதற் பிரிவான தேசசேவை இந்த அளவில் சுருக்கிக் கூறியதுடன் நிறுத்தி இனி இரண்டாம் பாகத்தைப்பற்றி யோசிக்கலாம்.

6. 1919-ம் ஆண்டில் 'பிளாக்பில்ஸ்' என்னும் சட்டம் இம்பீரியல் கவுன்ஸிலில் நிறைவேற்றப்பட்டபோது, கவுன்சில் கூட்டத்திலும் அது மகா ஜனங்களின் நன்மையைப் பாதிக்கும் என்று பேசி எதிர்த்து ஆக்ஷேபித்தார். அதே 1919-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 27-ந் தேதி அமிர்தசரஸில் கூடிய காங்கிரஸ் மகாசபையில் தலைமைவகித்து, நேரு, தேசபக்தி நிறைந்த சொற்பொழிவொன்று நிகழ்த்தினர். 'இந்தியா ஆட்சியைக் குறித்து அரசாங்கத்தார் கையாண்டுவரும் கொள்கைகளில் பல பாதகாம்சங்களுள்ளன. இனி பாரத தேசத்தின் பரிபூரண சுதந்திரத்திற்குப் பாடுபட முன்வந்து தியாகம் செய்யவேண்டியது நமது கடமையாகும் என்று பேசி பல புதிய வழிகளையும் புலப்படுத்தினர்.

இதற்கடுத்தாற்போல் பாஞ்சாலத்தின் பழைய துக்கச் செய்தியைக் குறித்து காங்கிரஸ் மகாசபையார் கூர்ந்து விசாரணை நடத்தியபொழுது, நேரு தமது இளவரசர்க்குரிய சுக சுகானுபவங்களையும், செல்வ வாழ்க்கையும் பொருட்படுத்தாமல், நாளொன்றுக்குப் பதினாயிரக் கணக்காய் கிடைக்கும் நியாய வாதத்தொழிலின் வருமானத்தையும் பெரிதாக எண்ணாமல் இராப்

பகலாக தினமாதினம் இக்கமிட்டியிற் சேர்ந்துழைத்தார். 'நமது நாடு இன்று இத்தகைய தாழ்ந்த நிலையை யெய்திவிட்டபோதிலும், சத்தியத்தையும் தர்மத்தையும் கைவிடாது எந்த ஆசையாலும் பீடிக்கப்படாது உழைக்கும் மகான்களைத் தோற்றுவிப்பதில் மட்டும் பின்னடையவில்லை' என்ற மகாத்மாவின் வாக்கை இங்கு நாம் சிந்திக்காதிருக்க முடியவில்லை. அன்று கடலொலியை அடக்கி யெழுந்த வங்கநாட்டு சிம்மமான பாபு சித்தாஞ்சனதாஸரும், மோதிலால் நேருவும் தீர நெஞ்சுடைய வீரசிம்மங்களாய், உண்மையைப் பேச ஒருக்காலும் அஞ்சாது முன்வந்தனர். சபர்மதி யாஸ்ரமத்தில் சாந்த மூர்த்தியாய் யிலங்கும் காந்தியடிகள் ஒத்துழையாமைப் போருக்கு வலம் புரிச் சங்கத்தை முழக்க, தாஸரும் நேருவும் சர்வ செல்வங்களையும் தியாகஞ்செய்து சாத்வீக தேவதையைப் பூசித்து அவளனுக்கிரகத்தைப் பரிபூரணமாகக் கொண்டு ஒத்துழையாமை இயக்கத்தை வலுப்படுத்தத் தொடங்கினர். தலைவர்களெல்லோரும் நாட்டின் நாலாபக்கங்களிலும் சுற்றுப்பிரயாணஞ் செய்தார்கள். நேரு ஐச்கியமகாணத்தில் உழைக்கவாரம்பித்தார். அவர் வெளியிட்ட 'சுயராஜ்யப் போராட்டம்' என்னும் துண்டுப்பிரசுரம் அவ்வியக்கத்தின் சிறந்த கொள்கைகளையும் அவற்றால் எய்தலாகும் விசேஷ பலன்களையும் விளக்கமாகக் கொண்டெழுந்து வேலைசெய்தது. இத்துண்டுப்பிரசுரம் நாகப்பூர் காங்கிரஸ் மகாசபை கூடியபின் வெளியிடப்பெற்றது. அதுமுதல் சாத்வீகமென்னும் தண்புனல் பாய்ச்சி தேசசேவை யென்னும் பயிரை நேருசீராக வளர்த்துவரலாயினர். (தொடரும்)

# ஸர். ஐஸக் நியூடன்.

(ஆசிரியர், A. சுருளியாண்டி கௌட)

இங்கிலாந்து தேசத்தில் லிங்கன் ஷயர் எனும் மாகாணத்தில் இற்றைக்குச் சுமார் இருநூற்றறுபது ஆண்டுகட்கு முன்னர் பண்டிதர் ஒருவர் இருந்தார். இளம் பிராயத்திலேயே அவரது தோற்றம் யாவருங் கண்டு விரும்பத் தக்கவாறு வெகு கம்பீரமா யிருந்தது. அவருக்குத் தேக வலிமை அதிகமாய் இல்லையெனினும் புத்தி வலிமை மிகுதி. எனினும், அவர் பள்ளியில் மிகவும் சோம்பேறியாய்த் தனக்குச்சமவயதான மாணவர்கட்குக் கீழ்ப்பட்டவராகவே இருந்தார். அவர் பெயர் ஐஸக் நியூடன். அவருக்குப் பன்னிரு பிராயமானவுடன், கிராந்தன் என்னு மிடத்திலுள்ள பெரிய பாடசாலை யொன்றில் கற்பிக்கப்பெற்றார். அவ்வமயம் அவர், ஓர் மருந்துக் கடைக்காரன் இல்லத்தில் வசித்துவந்தார். அவரைக் கண்ட பலரும் "இவன் முழுமூடன்; இவனுக்கு ஒன்றுமே தெரியாது" என்று இழித்துரைப்பர். அவரை ஓர் தினங்கூடப் பள்ளியில் புத்திசாலியென எவரும் புகழ்ந்து கூறியதே யில்லை. ஆகவின், கூடக் கற்ற மாணவர்களுங்கூட அவரை இகழ்ந்து பேசி நிந்திக்கத் தலைப்பட்டனர்.

ஓர் நாள் அவருக்கு மேலேயிருந்த மாணாக்க னொருவன், அவரை நன்றாய் உதைத்தான். அவன் அவ்வாறு தன்னை உதைக்க வொட்டாது காத்துக்கொள்ளத் தக்க வலிமை நியூடனுக்கு இல்லை. அங்ஙனம் அவருக்கு வலிமை யில்லாமற் போனதே, பிற்காலத்தில் அவருக்கும், உலகிற்கும் மிகுந்த நன்மை விளைதற்குக் காரணமா யிருந்தது. இல்லாவிடின், தன்னை உதைத்தவனைத் தானும் எதிரே உதைத்துவிட்டு அவர் அத்துடன் திருப்தி யடைந்திருப்பார். உலகமே அவரது ஆராய்ச்சித் திறத்தால் அடைந்த அளவற்ற நன்மையை இழந்திருக்கும். தன்னை அவமதித்தவனைத், தன் தேக வலிமையினால் ஒன்றும் செய்ய இயலாது போகவே, அவனைக் காட்டினும் கல்வியிற் சிறந்து அவனுக்கு மேலேபோய் அவனது கர்வத்தை அடக்க நியூடன் உறுதியாய்த் தீர்மானித்தார்.

பிறர் தன்னைக் கண்டு அதிசயிக்க வேண்டுமென முயல்வது நியாயந் தான்; ஆயின், பிறரை மானபங்கம் செய்து களிப்படைய வேண்டுமென நினைத்தல் மிகவும் தப்பிதம். பள்ளியில் தன்னை உதைத்த சிறுவனைத் திருப்பி உதைக்கக் கூடிய தேக திடம் நியூடனுக்கு இருந்திருக்குமாகில் அவருக்கும் அம் மாதிரியான எண்ணமே உதித்திருக்கும். ஆயின், நியூடன் வெகு கருத்தாய்க் கற்றுச் சீக்கிரத்திலேயே அப் பாடசாலைப் பிள்ளைகளுக் கெல்லாம் தாமே தலைவராயினர். அத்தனை பெருமை அடைந்தபோதிலும், தனக்குக் கீழுள்ள பிள்ளைகளுக்கு இகழ்ச்சியான செயல்களொன்றும் அவர் செய்ததில்லை; அவர்களுக்குக் களிப்புண்டாக்கத் தக்க காரியங்களையே செய்வார். தன் சாமர்த்தியத்திற்குத் தகுந்த மட்டும் வெகு நன்றாய்க் காற்றாடிகள் செய்து அவர்களுக் கீய்ந்து களிப்பூட்டுவார். காகிதத்தினால் விளக்குக் கூடுகள் செய்து, விளக்கேற்றி, அதைப் பனிக்காலத்துக் காலை வேளைகளில் கையில் பிடித்துக்கொண்டு செல்வார். இராக் காலங்களில் அவ் விளக்குக்

கூடுகளைக் காற்றாடியின் வாலிலே கட்டிப் பறக்கவிடுவார். அதைக் கண்ணுற்ற ஜனங்கள் பலர், இதென்ன தூமகேது நக்ஷத்திரம் போன்று தோன்றுகிறதே யென அஞ்சினார்கள். ஆடும் நேரங்களில் அவர், மற்ற பிள்ளைகள் ஆடுவது போன்று சாதாரணமாய் விளையாடுவதில்லை. வாள், கோடாரி, சம்மட்டி போன்ற ஆயுதங்கள் வாங்கி அவற்றைத் தகுந்தவாறு கையாள வெகு விரைவில் கற்றுக்கொண்டார். ஓர் மனிதன் உள்ளே உட்கார்ந்து கொண்டு, அவன் தானே ஓட்டிக்கொள்ளத் தக்க விதமாக ஒரு வண்டி உண்டு பண்ணினார். தண்ணீர் வீழ்ந்து அதன் மூலம் கால அளவு சரியாய் ஏற்படும் விதமாகக் கடிகாரமொன்று செய்தார். வழியோரத்தில் சில வேலைக்காரர்கள் ஓர் வகை விசித்திரமான வாயு யந்திரம் செய்துகொண்டிருக்கக்கண்டு தானும் அதேமாதிரி சிறிதாக ஒரு யந்திரம் செய்து அதைத்தான் குடியிருந்த வீட்டின் மேல் கட்டி வைத்தார். அவ்வியந்திரத்தை ஓட்டுமாறு அதனுள் ஓர் எலியையும் பிடித்துவிட்டு அவ் வெலிக்கு உணவாக மாவையும் போட்டுவந்தார். அவ் வெலிக்கு, "யந்திரம் ஓட்டி" யென்றும் பெயரிட்டார்.

நியூடன் வதிந்து வந்த அறையின் சுவரில், எங்கு நோக்கினும் கணித விஷயங்களே வரையப் பெற்றிருக்கும். நம் கண்ணுக்குத் தோன்றுகிறவாறே சூரியனது கதியையும் நன்றாய்க் குறித்துக் காட்டினார். ஆங்காங்கே மத்தியில் ஆணிகளைக்கொண்டு அரைமணி, ஒரு மணிகளின் தூரத்தைக்கூடத் தெளிவாகக் குறித்தார். இங்கு நாம் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்றுண்டு. அதாவது:—கணக்கிட்டுப் பார்த்துச் செய்யவேண்டிய காரியங்கள் பலவும் கணித சாஸ்திரத்தினாலேயே ஏற்படுகின்றன. ககோளமென்று கூறப்பெற்ற இப் பிரமாண்டத்திற்குச் சூரியனே மத்திமம். இந்தப் பூமி சூரியனைச் சுற்றி வருஷத்திற் கோர்முறை ஓடுகின்றது. அன்றியும் ஒரே காலத்தில் பூமி மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி 24-மணி நேரத்திற் கோர்முறை தனக்குத் தானே சுற்றுகின்றது. உண்மையில் சூரியன் ஓடுவதில்லை யெனினும், சூரியன் ஓடுவதாக நம் கண்ணுக்குத் தோற்றுவது ஏனெனின், நாம் ரயில் வண்டியில் ஏறிச் செல்லும்போது பக்கத்திலிருக்கும் மரம், செடி, தந்திக்கம்பி முதலியவை யெல்லாம் நமக்கு எதிர் முகமாய் ஓடுவதாய்த் தோன்றுவது போன்று, நாம் வாழும் பூமி மேற்கிலிருந்து கிழக்கே ஓடுவதனால் சூரியன், நக்ஷத்திரங்கள் முதலியவை யெல்லாம் கிழக்கினின்றும் மேற்கே ஓடுவதாய் நமக்குத் தோன்றுகின்றன.

நியூடனுக்குப் பதினைந்து வயதானவுடன் அவரது அன்னையார், அவரைத் தன் வீட்டு வேலைகளுக்கு உதவியாய், பாடசாலைக்கு அனுப்பாமல் வீட்டிலேயே வைத்துக்கொண்டாள். விவசாயம் முதலிய வேலைகளுக்கு அவர் தகுதியற்றவர். அப்படிப்பட்ட வேலைகளில் நியூடனது புத்தி நுழைவதேயில்லை. கிராந்தன் எனும் ஊரிலே அவன், தினந்தோறும் நியூடனைத் தன் வீட்டு விளைச்சல்களை விற்று, வீட்டுக்கு வேண்டிய பண்டங்களை வாங்கிவருமாறு கடை வீதிக்கு அனுப்புவாள். அவ்வமயம் நம்பிக்கையுள்ள வேலையாள் ஒருவனும் அவருடன்கூடச் செல்வான். அவர், அவ் வேலைக்காரனையே கடையிலுள்ள அலுவல்களையெல்லாம் பார்த்து வருமாறு விட்டு, தான் தனக்கு வழக்கமான ஒரு வீட்டில்போய் உட்கார்ந்து, பகல் முழுதும் படித்துக்கொண்டிருப்பார். ஒவ்வொரு சமயம் ஒரு வீட்டுக்கும் செல்லாது எங்கேனும் ஓர் வேலியோரத்தில் உட்கார்ந்து வாசித்துக்கொண்டு, கடைக்

குப்போன வேலைக்காரன் திரும்பி வருமளவும் அவ்விடத்திலேயே காத்திருப்பது முண்டு. புலங்களில் இருப்பினும் அவர் செய்யுங் காரியம் இங்ஙனந்தான். நியூடன், யாதேனுமோர் நூலை ஓதிக்கொண்டோ, ஓர் புதிய யோசனை செய்து கொண்டோ, தான் செய்த ஜல யந்திரத்தை உற்றுநோக்கிக் கொண்டோ, சமீபத்தில் எங்கேனும் ஆற்றோரங்களில் உள்ள நுரைகளை எடுத்துக் காற்றில் விட்டுக்கொண்டோதான் இருப்பாரே யன்றி, ஒரு கணமும் சும்மா இரார்.

நியூடனது மனப்போக்கை யறிந்த அவரது தாயார், வீட்டு வேலைகளுக்காக அவரை வைத்துக்கொண் டிருத்தல் தகுதியன்றென அறிந்து, தன்னால் கூடிய மட்டும் அவருக்குக் கல்வி கற்பிக்க வேண்டி, முன் அவர் வாசித்துக் கொண்டிருந்த கிராந்தன் பாடசாலைக்கே மறுபடியும் நியூடனை அனுப்பினாள். சில காலம் அங்கே யிருந்த பிறகு, கேம்பிரிட்ஜ் நகரிலுள்ள பாடசாலையில் போய் கற்குமாறு, உபாத்தியாயரா யிருந்த நியூடனின் சிறிய தந்தையார் தூண்ட, நியூடன் தமது இருபதாம் பிராயமான 1661-ம் ஆண்டு அக் கலாசாலையைச் சேர்ந்தார். கேம்பிரிட்ஜ் பாடசாலைக்குப்போய்ச் சேர்ந்த சின்னாட்களுக்குள் நியூடன், சந்திரனைச் சுற்றி யிருக்கிற பளபளப்புள்ள இரு வட்டங்களைப் பரிசோதித் தறிந்தார். கண்ணாடிகளைத் தூர திருஷ்டிக்கு உபயோக மாகுமாறு தீட்டினார். ஒளி, நிறம் இவற்றின் தன்மையைக் கண்டறிதற்கு உபயோகமான பல பரிசோதனைகளையும் செய்துவந்தார். அவ்வமயம், கேம்பிரிட்ஜ் நகரில் கொடிய கொள்ளை நோயொன்று உண்டாகவே, அவ்விடத்தை விட்டுத் தமது சொந்த ஊருக்குத் திரும்பினார். அந்தரத்தில் எறியும் எந்த வஸ்துவும் அங்கு நில்லாது பூமியில் வந்துவிழ வேண்டியதற்குக் காரண மென்ன வென்பதைப் பற்றி ஆலோசிக்கத் தொடங்கினார். அவ்வாறு சிந்தித்துக் கொண்டே ஒருநாள் நியூடன் ஓர் தோட்டத்தில் உட்கார்ந்து கொண் டிருக்கையில், ஒரு மரத்தினின்றும் பழமொன்று கீழேவிழ, அதைப் பார்த்தவுடன், எந்நியாயத்தால் இந்தப் பழம் மரத்தின்மேலிருந்து கீழே விழுந்ததோ, அதே நியாயத்தால் ஆகாயத்திலுள்ள கிரகங்கள் கூடப் பூமியில் வந்து விழவேண்டும் எனும் கருத்து அவர் மனதில் தோன்றிற்றாம். அதையே காரணமாகக் கொண்டு அவர் ஆகர்ஷண சக்தி (இழுப்புக் கவர்ச்சி)யைப் பற்றிச் சிறந்த நூல் ஒன்று எழுதினார். அந்நூலின் அருமையைப் பார்த்து பிரான்ஸ் தேசத்துச் சோதிட சாஸ்திரி யொருவர், "இப்படிப்பட்ட அருமையிலும் அருமையான புத்தகம் எழுதும் ஆற்றல் வாய்ந்தவர் உலகில் நியூடனைத் தவிர வேறொருவரு முண்டோ?" என்றுகூறி அதிசயித்தார்.

நியூடனுக்கு ரசாயன சாஸ்திரத்தில் மிகுந்த விருப்பம். அதனால் அவர் உறையுந் தருணமான நீரிலுள்ள சூடு முதற்கொண்டு, எரிகிற தணலிலுள்ள சூடு வரையிலுமுள்ள உஷ்ண நிலைகளின் பேதங்களையெல்லாம் வரிசையாகக் கண்டு வரைந்தார். அக்கினி, அக்கினிச் சுவாலை இவற்றின் தன்மையைப் பற்றியும் ஓர் சிறிய நூலெழுதினார். தூர திருஷ்டிக்கு உபயோகமான கருவிகளையும் விருத்தி பண்ணினார். இவ்வாறே இன்னும் அநேக காரியங்கள் செய்தார். நியூடன் ஒரு நிமிஷமேனும் ஒன்றுஞ் செய்யாம லிருந்ததில்லை. எப்போதும் ஆலோசனையிலேயே மூழ்கிக் கிடப்பார். அதனால் அவர் அநேக விதமான சாஸ்திர சர்ச்சைகள் செய்து, அவற்றின் மூலமாகப் பெருமை பெற்றார். ஆகவே, அவருக்கு ஒன்றின்மே லொன்றாய்ப் பல கௌரவங்கள் ஏற்பட்டுக் கடைசியில், ஸர் எனும் பட்டமும் கிட்டிற்று.

நியூடன் தனது வாழ்நாளில் ஒருநாளும் மூக்குக்கண்ணாடி தரித்துக் கொண்டதில்லை. அவர் பார்வைக்குக் குட்டையாக இருப்பினும், எப்போதும் அரிய விஷயங்களைப் பற்றிச் சிந்தித்த வண்ணமாகவே இருப்பார். எதிரில் ஏதேனுமோர் புத்தகமும், கையில் எழுதுகோலும் இன்றி அவர் ஒரு நிமிஷங்கூட இரார். நியூடன் வேலையில் வெகு சிரத்தையும், நடத்தையில் சிறந்த ஒழுக்கமும் உடையவர்; ஏழைகளிடத்தில் மிகுந்த இரக்கமுள்ளவர். அவர் ஒருநாளாவது கூட்டங்களிற் சென்று வீண்பேச்சுப் பேசி வம்பளந்ததே இல்லை. எப்போதும் ஏதேனுமோர் நன்மையைக் கருதி ஒரு காரியம் செய்துகொண்டேயிருப்பார். இவ்வளவிருந்தும், அவர் தனது பெருமையை ஒரு பெருமையாகக் கருதினதே யில்லை. இப்படிச் சிறந்த விஷயங்களைக் கண்டு பிடிக்கும் ஆற்றல் உங்களுக்கெவ்வாறேற்பட்டது என நியூடனை எவரேனும் கேட்டால், அவர், எல்லாம் ஓயாத ஆலோசனையினால்தான் உண்டாயிற்று; இப்போது நான் லோகோபகாரமான காரியம் ஏதேனுமொன்று செய்திருப்பேனாகில் அது, வருந்தி உழைத்ததனாலும், நிதான சிந்தனையினாலும் உண்டானதே யன்றி வேறல்லவெனக் கூறுவார். அவரது நண்பர்கள் வந்து உம்முடைய சாமர்த்தியத்தைப் பற்றி உலகில் பலரும் புகழ்கிறார்கள். இத்தனை கீர்த்தி உம்மைத் தவிர வேறெவர்க்கு உண்டாகுமென்று கூறினால், அதற்கு அவர் என்னுடைய உழைப்பைப் பற்றி உலகத்தவர் என்ன எண்ணினும், எல்லாக் காரியமும் எனக்குக் குழந்தை விளையாட்டாகத் தோன்றுகின்றனவே யன்றி, அதில் யாதொரு கஷ்டமும் தோன்றவில்லை என்பார். இங்ஙனம் சிறந்த காரியங்களிலேயே தமது காலத்தைக் கழித்துக் கடவுளின் மகிமைகளை யெல்லாம் கண்டு வியந்து தமது எண்பத்தாறாவது வயதான 1727-ம் வருஷத்தில் தமது பூத உடம்பை நீத்துப் புகழுடம்பைப் பெற்றார். இங்கிலாந்தில் சிறந்த புருஷர்களைப் புதைக்குமிடமான வெஸ்ட் மின்ஸ்டர் ஆபி எனும் இடத்தில் அவரது சவம் அடக்கம் செய்யப்பெற்றது. கேம்பிரிட்ஜ் வித்தியா சாலையின் துவாரத்தில் அவரது உருவச் சிலையொன்று அவர் ஞாபகார்த்தமாக ஸ்தாபிக்கப்பெற்றிருக்கிறது.

"ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன் றில்."

## எழுவாய்! பயனிலை!! செயப்படு பொருள்!!!

ஒரு உபாத்தியாயர் மாணவனைச் சுட்டி "அப்பா இந்தப் பாட்டிற்கு எழுவாய் எது? பயனிலை எது? செயப்படுபொருளென்ன?" என்று வினவ, மாணவன் மௌனஞ் சாதித்து நின்றான். உபாத்தியாயர் தாம் அவனுக்கு இவற்றைக் கண்டுணர்த்தும் வகையைப் பன்முறை கற்பித்தும் அவன் இப்பொழுது பதில் கூற முடியாமல் தயங்கியது கண்டு

"அப்பா நீ எழுவாய்! உன்னால் இங்கு ஏதும் பயனிலை!! எழுந்து நடப்பதே செயப்படு பொருள்!!!" என்றார்.

இது ஒரு சமயோஜிதம்.



# வேதாந்தம்

## வேதாந்த சாரசங்கிரக வசனம்.

(529-ம் பக்கத் தொடர்ச்சி.)

(பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப் பண்டிதர், சித்தூர்.)

(2) அஜஹதீ லட்சணை:—மதத்தின் வாச்சியார்த்தத்தை விடாமலே அதன் சம்பந்தம் அங்கீகரிக்கப்படின் அது அஜஹதீ லட்சணையாம்.

"சிவப்பு ஓடுகிறது" என்னுமிடத்து இந்த லட்சணை அங்கீகரிக்கப் படுகின்றது. அதுபோல, தத்துவமசி மகாவாக்கியத்தில் பொருந்தாது.

'சிவப்பு ஓடுகிறது' என்பதில் சிவப்பு என்பது ஒரு குணத்தின் பெயராம். குணம் எப்பொழுதும் ஒரு பொருளைச் சேர்ந்திருப்பதே யன்றி தனித்திருப்பதன்று. ஆகவே, சிவப்பு என்னும் குணம் ஓடுகிறது என்பது அசம்பவம். அதனால் இந்த வாக்கியத்தில் அஜஹதீ லட்சணையால் சிவப்பு நிறமுடைய ஓர் மிருகம் ஓடுகிறது எனப்பொருள் கொள்ளவேண்டும். இதில் சிவப்பு என்பதின் வாச்சியார்த்தம் விடப்படாமலே மிருகரூபமாகிய லட்சியார்த்தம் கிரகிக்கப்படுகிறது. ஆகலின் இங்கு அஜஹதீ லட்சணை கிரகிக்கப் படுகின்றது. இது மகாவாக்கியத்தில் பொருந்ாது. ஏனெனின்,

எதனால் ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தைப் போதிக்கும் தத்துவமசி மகாவாக்கியத்தில் ஜீவப்பிரஹ்மங்களின் சைதன்யங்க ளிரண்டிற்கும் பரோக்ஷத் தன்மை அபரோக்ஷத் தன்மை முதலான விரோதாமிசங்களை விடாமல் ஐக்கிய ரூபமாகிய வாக்கியார்த்தம் சித்திப்பதில்லையோ அதனால் அஜஹதீ லட்சணை அங்கீகரிக்கப்படாது.

(3) ஜஹதஜஹதீ லட்சணை:—விரோத பாகத்தைவிட்டு விரோதமில்லாத பாகத்தைக் கிரகிக்கும் பொழுது அது ஜஹதஜஹதீ லட்சணையாம்.

'அந்த தேவதத்தன் இந்த தேவதத்தன்' என்று ஒருவன் சொல்லுகிறான். ஒருவன் முன்பு ஒருகாலத்தில் ஒருதேசத்தில் தேவதத்தன் என்பவனைப் பார்த்தான். அவனே பின்பு வேறொரு தேசத்தில் அந்த தேவதத்தனையே பார்த்து அந்த தேவதத்தனே இந்த தேவதத்தன் என்கிறான். அவன் முன்னர் பார்த்தது ஒருதேசம்; இப்பொழுது பார்த்தது வேறொரு தேசம். அது ஒருகாலம்; இது வேறுகாலம். அப்பொழுது ஒரு வேஷம்; இது வேறுவேஷம். ஆகையால் 'அவனே இவன்' என்பதற்குத் தேசம் காலம் முதலியவை விரோதமாகும். அதனால் இந்த பாகத் தியாகலட்சணையால் விரோதபாக மாகிய தேசகாலாதிகளை விட்டு விரோதமில்லாத பாக

மாகிய தேவதத்தனுடைய தேகத்தை மாத்திரம் கிரகித்து முன்பு பார்த்த அந்த தேவதத்தன் இந்த தேவதத்தன் என்று ஐக்கியம் கொள்ளப் படுகின்றது. அதுபோல,

'தத்துவமசி' என்னு மிடத்தில் வாக்கியமாயினும் வாக்கியார்த்த மாயினும் பரோட்சத் தன்மை அபரோட்சத் தன்மை முதலிய தர்மங்களோடு கூடிய இரண்டு சைதன்யங்களுக்கும் உண்டாகிய ஏகத்வரூப மாகிய வாக்கியார்த்தத்திற்கு விரோதமாக வுள்ளதும் பரோட்சத்தன்மை அபரோட்சத் தன்மை சர்வஞ்ஞத்துவம் கிஞ்ஞத்துவம் முதலாகிய ரூபமாக வுள்ளதும் புத்தி முதல் தூலம் வரைக்கும் உள்ளதும் அவித்தியாசம் பந்தமானதும் அநாத்ம வடிவமானதுமான பாகத்தைவிட்டு விரோத மில்லாததும் சுத்த சைதன்ய வடிவமும் கேவலம் சத்ரூபமானதுமாகிய வஸ்துவை இந்த லட்சணையால் நன்குபோதிக்கின்றது.

### அகண்டார்த்தம்.

சகலவித உபாதிகளாலும் விடப்பட்டதும் சச்சிதானந்த வடிவமும் இரண்டாவதற்றதும் பேதமற்றதும் ஆபாசமில்லாததும் அத்தகையது இத்தகையது எனச் சொல்லப்படாததும் ஆதியந்த மற்றதும் அனவச் சின்னமும் ஊகிக்கத் தகாததும் தெரிந்து கொள்ளச் சாத்தியமாகாததும் நிர்க்குணமுமாகிய பிரஹ்மம் சேஷிக்கின்றது. (மிஞ்சுகின்றது.)

(பேதம் முதலாகிய லட்சணங்கள் அனைத்தும் உபாதியால் உண்டானவை யாகலின் அந்த உபாதிகளை நீக்குவதனல் சொல்லப்பட்ட லட்சணங்களுள்ள நிர்க்குணப் பிரஹ்மம் மிஞ்சுகின்றது.)

ஜீவப்பிரஹ்மங்களுக்கு விரோதம் உபாதியால் கூடியிருத்தலால் வந்தது. ஒன்ருகக் கிரகிப்பதனல் உபாதி சகிதத்தன்மை நீங்குவதனல் ஜீவப் பிரஹ்மங்களுக்கு யாதொரு விரோதமுமில்லை. ஜீவேசுவரர்களுக்கு மாயை அவித்தை வடிவ உபாதியும் அவ்வுபாதியோடுகூடி யிருத்தலும் அவ்வுபாதியின் தர்மங்களை யடைதலும் பரஸ்பர பேதமும் சாக்கிராவத்தையில் காணப்படும். ஆகையால் இவையனைத்தும் மித்தையே. நித்திரை முதலிய அவஸ்தா பேதமும், ஜன்மம், சரீரதர்மங்கள், சுகதுக்கங்கள் முதலிய பிரபஞ்சங்களும், ஜீவேசுவராதி பேதங்களும் ஆகிய இவையனைத்தும் அவித்தியா கற்பிதமாம். ஆகலின் இதனைச் சத்தியமெனச் சாதித்த லியையாது. இன்னும் மாயையாற் கற்பிதமாகிய தேசம் காலம் ஜகம் முதலிய பிரமைகளும் இத்தகையனவே. இவ்விரண்டிற்கும் என்ன பேதமிருக்கின்றது? இதில் எது சத்தியம் எது அசத்தியம்? கண்டவஸ்துக்களையே காண்டல் முதலிய பிராந்தி கற்பிதங்களாகிய விகற்பங்களினல் சொப்பனவத்தைக்கும் சாக்கிராவத்தைக்கும் எவ்விதபேதமும் காணப்படாது. ஆகலின் சொப்பனம் எங்ஙனம் மித்தையோ அங்ஙனமே சாக்கிராவத்தையும் மித்தையேயாம். சொப்பனம் சாக்கிரம் என்னு மிவ்விரண்டும் அவித்தியா காரியங்களே. இவ்

விரண்டிலும் திரிசியம் முதலிய கற்பனைகள் சமானமாகவே யிருக்கின்றன. ஆகலின் இவ்விரண்டும் சமானமே. இதுவு மன்றி, நித்திராவத்தை (சுழுப்தி) யில் சாக்கிர சொப்பனங்க ளிரண்டும் அபாவமாகின்றன (இல்லாமல் போகின்றன). ஆகலின், இவ்விரண்டிற்கும் எவ்வித பேதமுமில்லை. அதனால் இவ்விரண்டும் மித்தையே. பிரஹ்மத்தினிடத்தில் சஜாதீயம் விஜாதீயம் சுவகதம் என்னும் பேதம் பிராந்தி கற்பிதமேயன்றி வாஸ்தவத்தில் முக்காலத்துமில்லை. எதனால் பேதம் கற்பித மாத்திரமோ அதனால் சத்ரூபமும் இரண்டாவதில்லாததும் விகற்ப மில்லாததும் உபாதி யில்லாததும் நிர்மலமானதும் நிரந்தர ஆனந்தமே வடிவாக உள்ளதும் சங்கற்ப மற்றதும் ஆதார மற்றதுமாகிய பிரஹ்மம் ஏகமேயாகும். எந்த பிரஹ்மம் தன்மாத்திரமாயும் பரமசாந்த சொரூபமாயும் அனவச் சின்னமாயும் ஆனந்தமாத்திரமாயும் சன்மாத்திரமாயும் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றதோ அத்தகைய பிரஹ்மத்தினிடத்து எவ்விதபேதமும் இல்லவேயில்லை. குணங்கள் காணப்படுவது மில்லை. வாக்கு பிரவர்த்திப்பதுமில்லை. மனம் பிரவர்த்திப்பது மில்லை. இந்த நிரதிசயமும் சத்தியமும் சச்சிதானந்த வடிவமும் சாஸ்வதமுமாகிய எந்த பிரஹ்மம் உளதோ அந்த பிரஹ்மமே நீ. அன்பனே! நீ தேகமன்று, பிராணமன்று, இந்திரிய சமுதாயமன்று, மனமன்று, புத்தியன்று, அகங்கார மன்று, இவற்றின் சங்காதமு மன்று. வேறுயாரெனின்? இவற்றிற்குச் சாட்சி மாத்திரமாய்க் காணப்படும் நிர்மலமாகிய எந்தப் பிரஹ்ம முண்டோ அந்தப் பரப்பிரஹ்மமே நீ.

எந்த வஸ்து பிறக்கிறதோ அந்த வஸ்துவே வளர்கிறது. அதுவே காலத்தில் மரணமடைகிறது. நித்தியனும் வியாபகனும் உற்பத்தி யில்லாதவனுமாகிய உனக்கு ஜனனமில்லை. அப்படியே மரணமுமில்லை. உன் தேகமே பிறந்தது. அதுவே விருத்தியடைகிறது. கர்ம வசத்தால் நசிக்கிறது. நீ இந்த தேக சம்பந்தங்களாகிய எல்லா அவஸ்தைகளிலும் சாட்சி மாத்திரமா யிருக்கிறாய். ஞானசொரூபியா யிருக்கிறாய். தனக்குத் தானே பிரகாசிப்பதும் சர்வவடிவானதும் சுழுத்திவரைக்கும் நான் நான் என்று எப்பொழுதும் ஏகவடிவாய் பிரகாசிப்பதும் புத்தியையும் சகல விகாரங்களையும் தெரிந்து கொள்ளுவதுமாய் நிர்விகாரமாகிய எந்தப் பிரஹ்ம முளதோ அந்தப் பிரஹ்மமே நீ. (தொடரும்.)

## அறிக்கை.

“ஆனந்தபோதினி” மாத சஞ்சிகைக்கு 14-ம் ஆண்டில் புதிதாய்ச் சேர்ந்த சந்தாதாரர்களின் எண்கள் மாற்றப்பட்டுள்ளன. தயவு செய்து கவனிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேம். 15-ம் ஆண்டிற்கு சந்தா மணியார்டர் செய்பவர் மாற்றப்பட்டுள்ள ஷை எண்களைத் தயவு செய்து குறிப்பிட்டனுப்பும்படி கோருகிறேம்.

# இன்பம்.

மாந்தை-சா. கிருஷ்ணய்யர்.

ஆண்டவனால் படைக்கப்பட்டுள்ள இப்பரந்த பூவுலகின்கண் வசிக்கும் எல்லா ஜீவராசிகளும் இன்பத்தை யடைவதையே இயற்கைக் குணமாகக் கொண்டிருக்கின்றன. இன்பானுபவத்தில் ஆனந்தமும், துன்பானுபவத்தில் துக்கமும் கொள்வதை இயற்கை குணமாகக் கூறுவர் பெரியோர்.

ஒவ்வொரு ஜீவனும் ஒவ்வொருவகையை இன்பமாகவும், ஒவ்வொரு வகையைத் துன்பமாகவும், ஒரு ஜீவனுக்கு இன்பமாகவுள்ள வஸ்துவை மற்றொரு ஜீவன் துன்பமாகவும் கருதி யிருக்கின்றனவே யல்லாமல், ஒரே வஸ்துவை ஸமஸ்தமான ஜீவன்களும் இன்பமாகவோ, துன்பமாகவோ பாவிக்கும் தன்மையை இயற்கை குணமாக வுடைத்தா யிருப்பதில்லை.

ஸர்வஸங்க பரித்யாகம் செய்துள்ள ஸன்யாசிகளோ பேரின்பம் ஒன்றையே இன்பமென்று கூறுகிறார்கள். அதை அடைவதிலேயே தம் முழு நோக்கையும் செலுத்துகிறார்கள். அதை அடைவதில் எவ்வித இடுக்கண்கள் நேரிடினும் அவைகளைச் சற்றும் லக்ஷியம் செய்கிறார்களில்லை. அவர்கள் உலகோரால் இன்பானுபவப் பொருட்களென்று கூறப்படுபவற்றை இன்பப் பொருட்களாக (இன்பம் பயக்கும் இனிய பொருட்களாக) நினைப்பதில்லை. அவர்கள் கூறுவதாவது:—

பேரின்பமொன்றையே இன்பமென்று கூறத்தகும். மற்றபடி உலகோரால் இன்பமாகக் கருதி யிருப்பவையெல்லாம் துன்பத்திற்கே வழிகாட்டியாக விருக்கின்றன. அவைகள் பேரின்பத்தைப் போன்று நித்தியானந்த சுகத்தை யளிக்கும் வல்லமையைப் பெற்றிராமல், கிஞ்சிற்று சுகத்தையும் பிறகு மகத்தான துன்பத்தையுமே யளிக்கும் ஆற்றலையுடையவை. ஆதலால் துன்பம் கலவாத இன்பம் பேரின்ப மொன்றே. ஆனால் அப் பேரின்ப சுகத்தையடைய முதலில் கஷ்டங்கள் பல படவேண்டும்.

ஒரு வியாதியஸ்தன், முதலில் மனதிற்குத் துன்பந்தரும் மருந்துகளையுண்டு கஷ்டமுள்ள பத்தியங்களில் தவறாமலிருந்தால் பிறகு எப்படி துன்பமாகிய அவ்வியாதி நீங்கி, இன்பமாகிய சுகத்தை யடைவானோ அதைப்போல, துன்பமாகிய ஜனன மரணாதி வியாதிகளினின்றும் நீங்கிப் பேரின்பமாகிய சுகத்தை யடைய, ஆசார வியவகார ஜபதபாதி நல்லொழுக்க மென்னும் மருந்தையுண்டு, இந்திரிய நிக்ரஹ ஏகாக்ர சித்த, ஏகைகபாவம் முதலான கடும் பத்தியங்களைத் தவறாமல் அனுஷ்டித்து வரவேண்டும்.

பேரின்ப மிருக்கும் ஊராகிய பேரூருக்குச் செல்லும் பாதையானது, கல்லும் முள்ளும், காடும் முரடும், கனவிருள் சூழ்ந்துள்ள காடாரம்பமும் நிறைந்ததாக விருக்கின்றது. அப்பாதையிற் செல்லுவது அதிகமான கஷ்டத்தையும், துன்பத்தையும் கொடுப்பதாகவிருக்கும். ஆனால் அக் கஷ்டங்களையும் துன்பங்களையும் லக்ஷியம் செய்யாமல், மனதைத் திடப்படுத்திக்கொண்டு சென்றால்தான் பேரின்பப் பேரூரை யடைந்து நித்தியானந்த சுகத்தை யடையலாம். அப்பாழும் பேரிருள் சூழ்ந்துள்ள படுமோசப் பாதையிற் செல்ல வழிகாட்டியாக ஒருவர் வேண்டுமல்லவா? அவ்வித வழிகாட்டியாக—மார்க்கசகாயனாக நம் அருமை ஆனந்தன் காத்துக் கொண்டிருக்கிறான்.

நேயர்களே! அவனையடைந்து—அவனது துணைகொண்டு—அதிக கஷ்டமான அப்பாதையைக் கடந்து பேரூர் சென்று பேரின்பத்தைப் பருகுங்கள். நமதானந்தன் நீடூழி வாழ்க.

# இந்திய பசு பரிபாலனம்

S. V. V.

(493-ம் பக்கத் தொடர்ச்சி)

**'மால்வி' (Malvi) பசுக்களும் (Kheri) 'கிரி' பசுக்களும்:** மத்திய இந்தியா முழுதும் சாம்பல் வெண்மை முதலிய நிறமுள்ள பசுக்கள் சர்வ சாதாரணமாய் வளர்க்கப்படுகின்றன. இவை கொழுத்துப் பருத்த உடலமைப்புடன், உறுதியான தலையும் கொம்புகளு முடையனவாயுள்ளன; உழவு முதலிய உழைப்பின்றி இயற்கையான புற்றரைகளில் மேய்ந்து வளருகின்றன. பசுக்காப்பாளர்கள் ஆண்டுதோறும் தக்ஷிண தேசத்திற்கு (Deccan) இவற்றை மந்தை மந்தையாக ஓட்டிக்கொண்டு போய்ச் சந்தை கூட்டி விற்பனை செய்கிறார்கள். இப்பசுக்களைப் பொருள்வளமுடைய நிலக் கிழவர்கள் ஆவலோடு நல்ல விலைகொடுத்து வாங்கிக் கொள்ளுகிறார்கள். இவை சுறு சுறுப்பும் உற்சாகமும் பலமும் உடையனவாதலின் உழவுக்கும் வண்டி வேலைக்கும் கிணற்றில் கவலை யேற்று நீரிறைப்பதற்கும் மற்றும் பயிர்த்தொழில் சம்பந்தமான சகல வேலைகளுக்கும் நன்கு பயன்படுகின்றன. மால்வி எருதுகள் நல்ல உடலழகும், அகன்று குறுகித்தாழ்ந்த தேகமும், வட்டமும் உறுதியுமான குளம்புகளும் உடையனவாய் உழைப்புக் கேற்றனவாயிருக்கின்றன. மால்விப் பசுக்கள் அதிக பால்வளமுடையன வல்ல. ஐக்கிய மாகாண 'கிரி' மாடுகள், 'மால்வி' மாடுகளை அநேகமாக ஒத்திருக்கின்றன.

**கிரி மாடுகள்:** கத்தியவாரின் தென்பாலுள்ள காடுகளிலும் 'கிரி' என்னும் பெயர்பெற்ற மலைச்சாரல்களிலும் பாலுக்குப் பெயர் போன ஒரு ஜாதிப் பசு மந்தைகள் வளர்க்கப்படுகின்றன. தனிக் கிரிமாடுகளுக்கும் பிற இந்திய கோவர்க்கங்களுக்கும் அநேக விதங்களில் விசேஷ வித்தியாசமுண்டு. இரண்டு நிறங்கள் அல்லது இரண்டு நிறங்களின் சாயை, இவ்விரு நிறங்களும் ஒன்றோடொன்று கலந்து ஒருவித அழகைத் தந்து நிற்றல், ஆகிய இவற்றையுடையவை அனந்தம். இப்பசுக்களின் முன்னெலும்புகளின் வளர்ச்சி, முகத்திற்கு வட்ட வடிவமான சொரூபத்தைத் தந்து அழகு பெறச் செய்கிறது. காதுகள் குழி முயலின் செவிகளைப் போன்று நீண்டிருக்கின்றன. இவை சரியான வளர்ச்சியும் அதற்குத்தக்க பருமனும் உடையவை. இவற்றைச்சரியானபடி வீடுகளிலோ தொழுவங்களிலோ, கொட்டில்களிலோ, கட்டிப்போட்டு வளர்ப்பதில்லை. ஏனெனில், சுயேச்சையின்மையால் இப்பசுக்கள் மூர்க்கக் குணமேற்பட்டு, சீக்கிரத்தில் பாலின்றி வற்றிப்போகின்றன. காளைகளும், எருதுகளும் பெரும்பாலும் ஒரே விதமான வேலைகளுக்கு உபயோகப்படுகின்றன. இவை எவ்வளவு பளுவான சுமை வண்டிகளையும் இழுக்குமாயினும் வேகமாக ஓடா. கிழத்தன்மையை யடைந்து விட்டாலோ உபகாரச் சம்பளம் கொடுக்க வேண்டியதுதான்.

**குஜராத்தி மாடுகள்:** இந்தியா முழுவதிலுமே குஜராத்தி மாடுகளைப் போல உழவு முதலான பல தொழில்களுக்கும் மிக்க உபயோகமான மாடுகள் வேறில்லை யென்று சொல்லலாம். அவற்றுள், 'வாடியல்' அல்லது (கன்கிரிஜி)

என்றழைக்கப்படும் மாடுகள் மிகவும் உயர்ந்தவை. இவை வெண்மை, ரஜிதம், சாம்பல் முதலிய வண்ணமுடையனவாய்க் கண்ணைக் கவரும் வனப்புள்ளனவாயிருக்கின்றன. இவற்றின் சுருளான கருநிறமுள்ள கொம்புகள் கம்பீரமான தோற்றத்தைத் தருகின்றன. பொதுவாகக் குஜராத்தி மாடுகளே சுறுசுறுப்பும் வலிமையும் உடையன.

ஹான்ஸி மாடுகள்:—ஹான்ஸி அல்லது ஹரியானு என்னும் கோவர்க்கம் குஜராத்தி மாடுகளைப் போலல்லாது மேனியழகு மிகுந்தனவாயுள்ளன. இவை கீழ் பஞ்சாபில் கூட்டங்கூட்டமாய்ப் போஷிக்கப்படுகின்றன. முன் போல இம்மாடுகளுக்கு இப்பொழுது பிரபலமான பேரில்லையானாலும் உயர்ந்தவை என்பதில் ஐயமேயில்லை. ஹிசார் (Hessar) என்னுமிடத்தில் துரைத்தனத்தார் மாடுகளை விசேஷ சிரத்தையுடன் போஷித்து உழவர்களுக் குதவுகின்றனர். இவ்வர்க்கப் பசுக்களுக்கு நிகராகப் பால் கொடுப்பவை எங்குமே இல்லை எனலாம். ஆனதுபற்றியே இப்பசுக்களின் பிறப்பிடமான பஞ்சாபில் சில பசுக்கள்கூட இல்லாமல் மற்றைய பாகத்தாரால் ஏராளமான விலை கொடுத்து இவை வாங்கப்படுகின்றன.

கீழ்ச்சிந்து மாடுகள்:—கீழ்ச்சிந்து பிரதேசத்தில் வளர்க்கப்படும் கோக்கள் பொதுவாக நிரம்பப்பால் தரக்கூடியவை. விவசாயிகளல்லாது, எப்பொழுதும் மாடுகளை மந்தை மந்தையாகக் காடுதோறும் மேய்த்துக் கொண்டே நாடுசுற்றி விற்றுக்கொண்டிருக்கும் ஒரு முஹம்மதியக் கூட்டத்தாரால் இவை பெரும்பாலும் காக்கப்படுகின்றன. இவற்றின் தோற்றமும், நிறமும், சுபாவமும் வெகுவாய்ப் பிற மாடுகளைக் காட்டிலும் வித்தியாசப்படுகின்றன. இப் பசுக்கள் நல்ல சிவப்பு வண்ண முடையனவாயும் இரண்டோரிடங்களில் வெண்ணிறப் புள்ளிக ளுடையனவாயு மிருக்கின்றன. நடுத்தரமான உயரமும் பருமனுமுள்ளன; இவையும் நிரம்பப் பால் கொடுக்கக் கூடியவை.

வங்கநாட்டு மாடுகள்:—வங்காளத்தின் கடற்கரை யோரமாயுள்ள பிரதேசங்களிலிருக்கும் மாடுகள் மிகவும் தாழ்ந்தவை: பீகார் முதலான இடங்களில் நல்ல பருவ மழையும் அதனால் இளவிளவென்று விசேஷப் பயிர் வளர்ச்சியும் இருந்துங்கூட நல்ல பசுக்கள் கிடையா. வங்காளத்தின் சுற்றுப் புறங்களிற்கூட விசேஷ ஜன நெருக்கடியால் கோரக்ஷணம் விசேஷமாயில்லை. வீடுகளில் ஏகதேசமாகப் போஷிக்கப்படும் பசுக்களும் முறைப்படி காக்கப்படுவதில்லை. பீகாரில் 'சுவாமிமாடு' என்ற முரட்டுக் காளைகள் யதேச்சையாக வளர்ந்து திரிகின்றன. இவற்றால் எவ்விதப் பிரயோஜனமில்லையானாலும் இவை பயிர் பச்சைகளை மிதித்தும் அழித்தும் செய்யும் துன்பத்திற்களவில்லை.

ஐக்கிய மாகாண மாடுகள்:—ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த அயோத்தி, ஆக்ரா முதலான பாகங்களிலுள்ள மாடுகள் ஒரே வகையினவாயினும் வளர்ப்பு சீதோஷ்ண நிலைகளைப் பொறுத்துச் சிற்சில வித்தியாசமுடையனவா யிருக்கின்றன. ஜீபு (Zebu) என்னும் உயர்ந்த திமிலுடைய ஒருவகை மாடுகள் குணத்திலும் சுபாவத்திலும் வடிவிலும் தனிப்பட்டனவா யிருக்கின்றன. வடமேற்கு ஜில்லாக்களில் பஞ்சாப், ஹரியானு வர்க்கத்தைப்போன்ற மாடுகளும், பண்டில்கண்டில் குள்ளமான ஆகிருதியும் கொழுத்துப் பருத்த உடலுமுடைய மாடுகளும் காக்கப்படுகின்றன. அந்தந்த ஜில்லாக்களில் பேர்போன சிற்சில வர்க்கங்களும் ஆங்காங்கே யுண்டு. அவற்றுள், 'கோசி'

'கீரி' வர்க்கங்கள் சிலாக்கியமானவை. ஆனால் பொதுவாகப் பேசுமிடத்து, கலப்பு வகையில்லாத தனி வளர்ப்புள்ள பசுவர்க்கங்கள் சில விருக்கின்றன. பார்த்த மாத்திரத்திலேயே இவை இன்னவர்க்கத்தைச் சேர்ந்தவை யென்பதைக் கண்டுபிடித்து விடலாம்.

ஐக்கிய மாகாண மாடுகளுள் கோளி, கீரி, பர்வான், கென்வாரியா என்ற ஜாதி மாடுகள் மிகவும் முக்கியமானவை. இவற்றுள் நேர்த்தியான வளர்ப்புள்ள சில தனிச்சாதி மாடுகள் மிகவும் சிலாக்கிய மானவைகளா யிருத்தல் பற்றி அம்மாகாண மட்டுமன்றி வெளி மாகாணங்களிலும் இம்மாடுகளுக்கு நல்ல தேவை யேற்படுகிறது.

'பஹறி' என்னும் ஒருஜாதி மாடுகள் இமய மலையின் அடிவாரப் பிரதேசங்களில் யதேச்சையாக மேய்ந்து வளர்கின்றன. இவை பஞ்சாப் வங்காள மாடுகளைப் போன்றிருக்கின்றன. ஆனால் விசேஷமான வளர்ப்பில்லாத இவ்வகை மாடுகளை 'தேசி' அதாவது உள்நாட்டுமாடு என்று கூறுவார்கள்.

அமிர்த சரஸ் முற்காலத்தில் ஆநிரை காத்தற்குப் பெயர்போனதாயினும், அங்கு தற்காலம் பசுக்காத்தல் க்ஷீணித்துப் போய் விட்டது. ஒருசமயம் லாகூர் ஜில்லாவில் உயர்ந்த ஜாதி மாடுகளுக்கென ஒரு பெரிய சந்தை கூட்டப் பட்டது. அது முதல் அப்பிரதேச நிலங்கள் விவசாயத்தில் முன்னேற்றமடைந்து, பாய்ச்சலாதாரமுள்ள கால்வாய்கள் வெட்டப்பட்டு ஏராளமான சாகுபடி நடந்து வருவதால் மாடுகளின் மேய்ச்சலுக்கு வேண்டிய புற்காடுகளில்லாது போயின. ஆகையால், மாடுகள் முற்றிலும் தொழுவங்களிலேயே வளர்க்கப் படுகின்றன.

பர்மா மாடுகள்:—பர்மாவிலுள்ள கோ வர்க்கங்கள் மிகவும் பஞ்சத்திலடிபட்டது போன்ற ஏழைச் சுபாவ முள்ளனவா யிருக்கின்றன; பர்மாவுக் கருகாமையிலுள்ள ஷான் ஸ்டேட்ஸ் (Shan States) மாடுகளுங் கூட இப்படியே காணப்படுகின்றன. பர்மா எருதுகள் திமிலுக்குப் பின்னிருந்து அளந்தால் 46-முதல் 50-அங்குலம் உயர முள்ளனவா யிருக்கின்றன. இளவெருதுகளின் திமில்கள் நன்றாகக் கொழுத்து உயர்ந்துள்ளன. விதையடிக்கப் பட்ட எருதுகளின் திமிலும் ஏறக்குறைய இப்படியே யிருக்கின்றது. பர்மா பசுவிற்கும் காளைக்கும் விசேஷ வித்யாசமுண்டு. பசுக்கள் வெகு இளமையிலேயே கன்றை ஈன்று அக் கன்றுகளுக்கு வெகு காலம் பால்கொடுத்து அதனால் தேகபலம் குன்ற வளராமல் நலிந்து நிற்கின்றன. பர்மா பசுக்களின் நிறங்களில் தேற்றமான வித்தியாச மேதுமில்லை. பொதுவாக எல்லாம் செந்நிறமுடையன; அதிலிருந்து வைக்கோல் நிறமும், மங்கலான பழுப்பு நிறமுமாகப் பலநிறங்கள் பலவாறாகப் பொருந்தி யிருத்தல் இயல்பு. இரண்டு நிறங்களுள்ள மாடுகள் மட்டும் வெகு அபூர்வமாயிருக்கும். பர்மா எருதுகளின் உடல்கள் சாதாரணக் கொழுப்புள்ளதாயும் சம லக்ஷணத்துடன் நல்ல வலுவுள்ளதாயு மிருக்கின்றன. இவற்றின் தலை மிகவும் சிறியதா யிருக்கின்றது; அதிலும் பசுவின் தலையோ பின்னும் சிறிதாயிருக்கும். கொம்புகள் பொருத்தமில்லாமல் வெகு கூழையாயிருக்கின்றன. கொம்புகள் வளர வளர அவற்றைச் சமமாக அறுத்து விட்டால் மாடுகள் இளமைத் தோற்றத்தைப் பெறுகின்றனவாம். இவ்வாறு செய்வது பர்மியர்களின் வழக்கம். பர்மா எருதுகளுக்குக் கழுத்தில் மிகுந்த பலமுண்டு. ஆனால் விதையடித்த பின் இப்பலம் அநேகமாக குன்றிப் போகின்றது. இம் மாடு

களின் களகம்பளம் (கழுத்தின் கீழ்த்தொங்கும் தோல்) அவ்வளவு பெரியதா யிராது. பர்மியர்கள் மாடுகள் நல்ல பருவத்தை யடைகின்ற வரையில் விதையடிப்பதில்லை. விதை யடித்தல் தென்னிந்தியாவில் நடைபெறு வது போன்றே நிகழ்கின்றது.

பர்மா பசுக்கள் நிரம்பப் பால் தருவன வல்ல. பர்மா விவசாயிகள் மாடுகளைக் கொண்டு பால் கறக்க வேண்டுமென்ற எண்ணமே கொள்வ தில்லை. கன்றுகளே பாலத்தனையும் பருகி விடுகின்றன. ஒரு மாடு ஒரு கன்றை யீன்றதிலிருந்து அடுத்த கன்று போடும் வரையில் முதற் கன்று தாய்ப்பசு விடத்திற் பால் குடித்துக்கொண்டே யிருக்கின்றது. பர்மியர் கள் எருதுகளைப் பற்றிய வரையில் நன்றாகப் பாதுகாத்து வருகிறார்கள்; அவற்றை வெயில் நேரத்தில் வேலை செய்விப்பதில்லை; வீட்டை யொட்டி யுள்ள மாட்டுக் கொட்டில்களிலோ, பட்டி மந்தைகளிலோ நிழலில் நிறுத்தி வைக்கிறார்கள்; மற்றைப்பொழுதில் மேயவிடுகிறார்கள்; கழனிகள் சாகுபடி செய்யப்படுகின்ற காலங்களில், மாடுகளைக் கட்டிப்போட்டு வைப்பார்கள்: இக்காலங்களில் இவற்றிற்குப் புல் வைக்கோல் முதலியன வயற்புறங்களி லிருந்து கொண்டுவரப்படுகின்றன. தரிசு அல்லது புறம்போக்கு நிலங்கள் எல்லாக் காலத்திலும் மேய்ச்சலுக்கே பயன்படுகின்றன. பருவ மாறுபாட் டால் புற்றரைகள் வெறுந்தரையாகவும் போகக் கூடுமாதலால், ஆண்டுதோ றும் கொஞ்சம் வைக்கோல் போராக வீடுகளின் பக்கலில் சேமித்து வைக் கப்படுகின்றது.

இதுவரை, இந்தியாவின் பற்பல மாகாணங்களிலுமுள்ள கோ, காளை எருதுவர்க்கங்களை முக்கியமாகத் தேர்ந்து அவற்றின் இயற்கையான குண குணங்களையும், உடலமைப்பு, மேய்ச்சலாதாரம், வளர்ப்பு, கொம்பு முதலிய உறுப்புக்களின் இலக்கணங்கள் முதலியவற்றையும் சுருக்கிக் கூறினோம். இனி, பசுக்காப்பைப்பற்றி எழுதுவோம். (தொடரும்)

### மீனு! மீனுக்ஷியானுள்.

ஒரு பார்ப்பன ஸ்திரீ தனது மீனுக்ஷி என்ற பெயருடைய சிறு பெண்ணை 'மீனு' வா! என்று உருக்கமாக அழைப்பது வழக்கம். ஒரு நாள் வீட்டு வாயில் வழியே ஒரு செம்படவன் மீன் விற்றுக்கொண்டு போனுன். அதே சமயம் இந்த ஸ்திரீ தனது பெண்ணை 'மீனு' என்று அழைத்தாள். செம்படவன் 'ஆமம்மா! கெண்டை மீன்!' என்று சொல்லிக்கொண்டு, கூடையை இறக்கினுன். அந்த மாது அவனை நிந்தித்து அனுப் பினுள். அன்று முதல் தன் பெண்ணை வாய்நிறம்ப 'மீனுக்ஷி' என்றழைக்கத் தொடங்கினுள்.




## பெண்களின் மண வயது.

S. ஜயலக்ஷ்மியம்மாள்.

ஆண்பெண் இரு பாலர்க்கும் உதவியாக விருந்து பல தேசீய விஷயங்களையும், பொது நன்மைகளையும், நம் தேச முன்னேற்றத்திற் கானவைகளையும், ஆன்மார்த்தத்தையும் விளக்கிவரும் நம் ஆனந்தபோதினியை 14 ஆண்டுகளாகப் படித்து நம்மால் இயன்ற வியாசங்களை எழுதிவந்த நாம், இப்பொழுது அதிக் கிளர்ச்சியுடன் பத்ரிகைகளிலும் பேபர்களிலும் தினம் வெளிவருகிற விஷயமாகிய பெண்மக்களின் "விவாக வயது சம்மத வயது" என்பவற்றைக் குறித்து எமது அறிவிற்கெட்டிய வரையில் சில எழுதப் புகுந்தோம்.

(1) பால்ய விவாகமானது, ஸ்திரீகள் கல்வி கற்பதற்கும் திடகாத்ரமான சரீரத்தை அடைவதற்கும், திடமானவும் ஆரோக்ய முள்ளவுமான மக்களைப் பெறுவதற்கும் தடையாய் இருக்கிறதென்பது உலகோர் அறிந்த உண்மையே.

மேலும் நம்தேசபெண்கள், தகுந்த வயதை யடைவதற்கு முன் பெரிய பாரமாகிய குடித்தன பாரத்தை கைக்கொள்வதினால்தான், வாலிப வயதிலேயே விருத்தைகளைப்போல் தோன்றவும், சிலர் (Hysteria, Tuberculosis) முதலான வியாதிகளுக்கு ஆளாகவும் நேரிடுகின்றது. ஆனல் விவாக வயது எதுவென்றும், விவாகம் எப்படி நடத்தப்பட வேண்டுமென்றும், எத்தகைய கல்வி நம்தேய ஸ்திரீகளுக்கு இன்றியமையாதது என்றும் இவ்விடத்தில் கூறுவது மிகவும் முக்கியம். விவாக வயதை 14-லிருந்து 16 ஆக மாற்ற வேண்டுமென்றும், சம்மத வயதைப் பெண்களுக்கு 18 ஆகச் செய்ய வேண்டுமென்றும் சாஸ்திர நிபுணர்களும் வைத்திய நிபுணர்களும் கூறுகிறார்கள். ஜனங்களில் சிலர் இக்கூற்றை ஆமோதிக்கிறார்கள். சிலர் மறுக்கிறார்கள். சிலர் (Age Consent Committee) யில் தினம் விசாரணை செய்கிறார்கள். இது கவர்ன்மெண்டின் சட்டமாக வரவேண்டுமென்று சிலர் கோருகிறார்கள். நாம் இவ்விஷயத்தை தினப் பத்திரிகையில் வாசித்து வருவதால் அதை இங்கு விவரிப்பது அனாவசியம்.

நம் தேசத்தின் சீதோஷ்ண ஸ்திதியுடன் நம் ஹிந்துக்களின் விவாக ஸம்பந்தமாகிய ஆழ்ந்த தத்துவத்தைக் கூர்ந்து யோசிக்கின் பெண்களின் விவாக வயதைப் 14 ஆகவும் சம்மத வயதைப் 16 ஆகவும் மாற்றுவதே சரியென்று தோன்றுகிறது. ஏன் எனில் பெண்கள் தக்கவயது அடைந்தவுடன்

அவர்களுக்குத் தகுந்த மணமகனைத்தேடி அவன் கையில் ஒப்புவித்தலே தங்களுக்கு முக்யமானவும் பாரமானவும் பொறுப்பென்று, ஹிந்து பெற்றோர்கள் கருதி யிருக்கிறார்கள். அபலைகளான ஸ்திரீகள் விவாகமின்றித் தனித்திருப்பின், தங்கள் கற்பைக் காத்துக்கொள்வது மிகவும் சிரமமென்றும், வஞ்சகமுள்ள சில ஆடவர்களால் ஏமாற்றப்படுவார்க ளென்றும் கருதியே அறிவிற் சிறந்த நம் மூதாதைகள், பெண்கள் தக்க பருவமடையு முன்னரே அல்லது அடைந்தவுடனேயோ தகுந்த கணவர்களைத் தேடி மணமுடிக்கும் வழக்கத்தை யுடையவர்களாய் இருந்தார்கள். மகாகல்விமான், பெரியராஜன், ஞானி, "ஞானஜனகன்" எனப் பேர்பெற்ற ஜனகனும் லோகமாதாவான ஜானகியை தகுந்த வயதடைந்தவுடனே அவளுக்குத் தகுந்த மணாளனைத் தேடி அவன் கையில் ஒப்புவிக்க வேண்டுமென்று கவலை கொண்டதையும்; ஸீதையை, சிவதனுசை ஒடித்த வீர கேஸரியான ஸ்ரீராமசந்திர மூர்த்திக்கு பாணிக்கிரகணம் செய்து கொடுக்கும்போது மிகுந்த ஸந்தோஷத்துடன் ஆனந்த பரிதனாய்

"இயம் ஸீதா மமஸுதா ஸஹ தர்ம சரீதவ
ப்ரதீச சைனம் பத்ரம் தே பாணிம் கிருண்ணீஷ்வ பாணினும்"

என்று சொல்லி பாணிக்கிரகணம் செய்து கொடுத்ததையும் ராமாயணம் படித்தவர் அறிவர்.

சிலர், பெற்றோர்கள் இப்படி பாணிக்கிரகணம் செய்து கொடுப்பது சரியானதல்ல வென்றும், இதனால் மணமக்களின் வாழ்க்கையில் இன்பம் அதிகமில்லாமல் துன்பம் மிகுந்திருக்கிற தென்றும் வரதக்ஷிணை என்னும் கொடிய நோய் பரவுவதற்கு இதுதான் காரணமென்றும், பெண்கள் தகுந்த வயது வந்த பிறகு தாங்களே தங்கள் வாழ்க்கைத் துணைவனைத் தேடிக் கொள்வதுதான் மிகவும் சிறந்ததென்றும் மேல் நாட்டார் அப்படிச் செய்வதால்தான் பல சீர்திருத்தங்களையும் முன்னேற்றங்களையும் உடையவர்களாய் இருக்கிறார்க ளென்றும் சொல்லவும் வியாசங்கள் எழுதவும் காண்கிறோம்.

அந்தோ இது எத்துணை அறியாமையாக இருக்கிறது!! நம்மவர் வழக்க விவாகத்தில் சிலருக்கு துன்பமேற்படின் பெருமபாலார்க்கும் இது எப்படி பொருத்தமாகும்?

பெண்களின் பெற்றோரும் பிள்ளைகளின் பெற்றோரும் உற்றாரும் உறவினரும் யோசித்து முடிக்கும் கல்யாணங்களிலேயே தவறுதல் நேரிடின் அபலையான ஸ்திரீ தன் புத்தி ஒன்றைக்கொண்டுதானே முடித்துக்கொள்ளும் விவாகமானது எப்படி அதிக சிறப்புடையதாக இருக்கும்?

மேல் நாட்டார் நாகரீகத்திற் சிறந்தவர்களா யிருப்பதும் விவாக விஷயத்தில் அவர்கள் வழக்கம் மிகவும் வெறுக்கத் தக்கதாகவே இருககிறது.

அவர்கள் தகுந்த வயது வந்தபின்பே மணமகனைத் தேடி மணம் முடித்துக் கொண்டாலும் வெகு சீக்கிரத்திலேயே அன்பும் ஒற்றுமையும் இல்லாதவர்களாய் (Divorce) விவாகரத்து செய்துகொண்டு விடுகிறார்கள். வேறொருவனைப்பார்த்து மணம் செய்து கொள்ளுகிறார்கள். ஒரு கிழவனை அவன் பணத்திற்காகவும் ஒரு யுவனை அவன் அன்பிற்காகவும் காதலிக்கிறார்கள்!!

நம் ஹிந்து ஸ்திரீகளோ வென்றால் ஒருவனுக்கே தன் உடல் பொருள் ஆவி மூன்றையும் அர்ப்பணம் செய்து திரிகரண சுத்தமாய் அவனையே தெய்வமாகக் கருதி உள்ளன்புடன் உபசரித்து, கணவன் எவ்வளவு அன்பில்லாதவனாய் இருந்தாலும், தன்னைக் கொடுமையாய் நடத்தினாலும், அல்லது வேறொருத்தியை மணம் புரிந்து கொண்டாலும், பொறுமையுடனும், ஸந்தோஷத்துடனும் இருப்பவர்களாய் விளங்குகிறார்கள்.

இதுநிற்க, ஸ்திரீகளின் கல்வி எத்தகையதாய் இருக்கவேண்டும் அவர்கள் ஆடவரின் கல்வியைப்போல் கலாசாலை (College) யில் வாசித்துப் பட்டங்கள் பெற்று உத்யோகம் செய்யவேண்டுமா? அல்லது ஸுகாதார முறைப்படி வீடுகளை வைத்துக் கொள்ளவும் நன்றாய் குடித்தனம் செய்யவும்; குழந்தைகளை ஆரோக்ய முள்ளவர்களாகவும் புத்திசாலிகளாகவும் வளர்க்கவும் உலக விஷயங்களையும் ராஜாங்க விஷயங்களையும் அறிந்து கொள்ளவும் போதுமான ஆங்கில பாஷாஞானம் உடைத்தானவர்களாய் இருந்தால் போதுமா?

வியாதி அணுகாமல் ஸுகாதார முறைப்படி வீடுகளை வைத்துக் கொண்டு, வருவாய்க்குத் தகுந்த செலவுகளைச் செய்துகொண்டு ஸரியான உடைகள், காலக் கிரமப்படி ஆகாரங்கள் முதலியவைகளால் குழந்தைகளைப் போஷித்து, வெளியில் சென்று வேலைசெய்து களைத்துவரும் தங்கள் புருஷர்களை தக்கபடி உபசரிப்பதற்கும் உலகத்தில் நடைபெறும் பொது விஷயங்கள் அற்புதங்கள் ராஜாங்க விஷயங்கள் சட்டங்கள் இவைகளை அறிவதற்கும் போதுமான ஆங்கில பாஷா ஞானம் பெண்களுக்கு இருந்தால் போதுமெனவே எமது அறிவிற் தோன்றுகிறது—

ஸ்திரீகள் பட்டம் பெற்று உத்தியோகம் செய்யப்புகில் வீட்டிலுள்ள குழந்தைகளையும் தம் புருஷர்களையும் தகுந்தபடி கவனிக்கத் தக்க மனுஷ்யர்கள் இல்லாமல் போம்; பிராமணர்கள் பிராமணரல்லாதார் என்னும் இருதிறத்தாரில் B.A., M.A., M. L. C., முதலான பட்டங்கள் பெற்றும் வேலை கிடைக்காமல் திண்டாடும் ஆண்மக்களோடு பெண் மக்களும் போட்டி போடப் புகின் வேலைத் திண்டாட்டம் மிகுதியாகிவிடும்! அல்லது ஆண்மக்கள் வீட்டிலிருந்து குடித்தனம் செய்து குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளும்படி நேரிடினும் நேரும்!!!

ஆதலால் பெண்கள் தகுந்தவயதில் மணம் முடித்துக்கொண்டு அறிவுடன் குடித்தன முறையில் விளங்குவதே மேன்மை. எல்லாம் வல்ல இறைவன் நம்தேசத்துக்கும் நம்தேய ஸ்திரீகளுக்கும் நன்மை புரிவானாக.

## தற்காப்புச் சதங்கை.

யோசிக்காமல் ஒன்றும் பேசாதே

படிக்காமல் ஒன்றிலும் கையெழுத்துப் போடாதே.

பார்க்காமல் ஒன்றையும் பருகாதே.

உன் அந்தரங்கங்களை எவரிடமும் சொல்லாதே.




மே. மாசிலாமணி முதலியார்.

3-3-29 ல் வெளிவந்த குடி யரசு மூன்றும் பக்கத்தில் நாட்டுவைத்தியம் என்னும் தலைப்பின் கீழ் செங்கல்பட்டு மகா நாட்டில் சித்த வைத்தியத்தை ஆமோதித்த விஷயமாய் நாட்டு வைத்தியத்திலுள்ள உண்மைகளை, எனது அன்பரும், காலஞ்சென்ற டாக்டர் நஞ்சுண்டராவ் அவர்களின் மூலம் 1909-ம் ஆண்டிலிருந்து எனக்குச் சினேகமாகியவரும், பார்ப்பனரல்லாதார் களின் முன்னேற்றத்தைக் கருதிவரும் குடி அரசின் இருதயமாய் விளங்குப வருமாகிய கைவல்யனார் எழுத முன்வந்தது போற்றற் பாலது.

(1) அப்பத்திரிகையில் கைவல்யனார்:— வைத்தியத்தின் பாகு பாடுகளை யும் அவற்றின் சாதக பாதகங்களையும் மேல் நாட்டார்கள் கண்டுபிடிக்க நாம் கையாண்டு வருகிறோமேயன்றி, வைத்தியம் நாளுக்கு நாள் மாறும் தன்மை களைப் பற்றி யறிய ஆசை கொள்வதில்லை என்றும், இப்பொழுது கண்டுபிடிக் கப்படும் வைத்தியத்தின் தத்துவத்தைப் படிக்கவேண்டு மென்றும், நோயாளிகளின் உயிரைக் காப்பாற்றும் வைத்தியப் பொறுப்பு அறிவிலும், கடமையிலுமே இருக்கிற தென்றும் நமக்கு எடுத்துக் காட்டினர்.

(2) மேல் நாட்டு வைத்தியப் பத்திரிகைகளில் எழுதும் விஷயங்களைப் படித்த நம் நாட்டுப் பெயர் பெற்ற இங்கிலீஷ் வைத்தியர்கள் செய்யும் வைத் தியத்தையும் அவர்கள் சொல்லும் பத்தியத்தையும் அறிந்தவர்களுக்கு நமது நாட்டு வைத்தியத்தின் தத்துவத்திற்கே ஆங்கில வைத்தியம் வந்து கொண் டிருப்பது நன்கு விளங்கும் என்று கூறியபோது பிரபல வைத்தியர் ஆகாரத் தை மென்று தின்ன வேண்டுமென்று சொல்லுவது நமது நாட்டுப் பழங் கதைகளில் நொருங்கத்தின்றால் நோயில்லை என்னும் சுகாதார விஷயம் ஒன்றை வெளியிடுகின்றதென்று விளக்கிக் காட்டினர்.

(3) நம்மவர்கள் தொன்று தொட்டு நம் நாட்டு புல் பூண்டு, இலை, தழை முதலியவைகளைக் கொண்டே வியாதிகளைப் போக்கிக் கொண்டிருந்தார்கள். கிராமங்களிலே அவ்விதம் நடந்துவந்தது. குழந்தைகளுக்குக் காணும் வியாதி களாகிய மாந்தம் முதலானவைகளுக்கு என்னெய் மாத்திரை பச்சிலை முத லானவைகளைத் தாங்களே தெரிந்துசெய்து வைத்துக்கொண்டோ அல்லது செய்துவைத்துக் கொண்டிருப்பவர்களிடம் இலவசமாக வாங்கிக்கொண்டோ உபயோகப்படுத்தி வந்தார்கள். அது இப்போது மறைந்துகொண்டு வருகிற தாய்த் தெரிய வருகிறது. இதன் மூலம் நம் நாடு எவ்வளவு வைத்திய செல வின்றி வாழக்கூடிய நாடென்பதையும் அப்படியே வாழ்ந்து வந்த தென்ப தையும் நன்கு விளக்கியுள்ளார்.

(4) எட்டுக்கால் பூச்சியின் கூட்டைப்பற்றி (சர்வ விஷயங்களையும் விளக்கும்) மேல் நாட்டு அகராதிகளிலுள்ளவற்றை எடுத்துக் காட்டியதும் பாராட்டத் தக்கதே. இதன் உண்மையை உணர்ந்தவர்களுக்கு இதன் அருமை இனிது விளங்கும். சாமிகள் கூறியவைகளில் நான் எவ்வித குறையும்

கூற வரவில்லை. எட்டுக்கால்பூச்சியின் கூண்டு ஒன்று; மற்றொன்று அப்பூச்சிகள் உண்டுபண்ணும் ஒட்டடை (இங்கிலீஷில் Cobweb-காப்வெப்). ஆக இரண்டுண்டு. அவற்றுள், எட்டுக்கால் பூச்சியின் கூடு வட்ட வடிவாய், வெண்மை நிறமாய், கால் ரூபாய் அளவாய் இருக்கும். அக் கூண்டைக் கட்டி, குஞ்சு பொரிக்கும் காலம்வரையில் தன் வயிற்றிலேயே அப்பூச்சி வைத்துக் கொண்டிருக்கும்; குஞ்சு பொரித்தவுடன் கூண்டைத் தள்ளிவிடும். அக் கூண்டு மேல் பாகம் கீழ்ப்பாகம் என இரண்டு பாகமாய் விளங்கும்.

இக் கூண்டை அதாவது குஞ்சு பொரித்த பிறகு காணும் கூண்டை எடுத்து பனவெல்லத்தில் வைத்து முறைக் காய்ச்சலுக்கு, காய்ச்சல் வரும் தினத்தன்று காலையில் கொடுக்க முறை சுரம் நீங்கிவிடும். ஆனால் நாள்பட்ட முறை சுரத்திற்கே இது வேலை செய்யக் கூடியது. வயிற்றில் சுரக் கட்டி இருந்து சுரம் வருமானால் அது காலை இது குணம் செய்யாமலும் போகும்.

பூச்சிக் கூண்டானது உஷ்ணத்தைக் கொடுக்கக் கூடியது; கல்லீரல், மண்ணீரல் பேரில் வேலை செய்யவல்லது.

இரண்டு தரத்திற்கு மேல் கொடுத்தால் இருமல் காணும்; சிலசமயங்களில் சீதபேதியும் உண்டு பண்ணும்.

ஒட்டடை என்பது பட்டு நூலைப் போல் தொங்கிக் கொண்டிருப்பதொன்று. அதையே சுவாமிகள் கூறியுள்ளார்கள். இதைப்பற்றியே (எல்லிங்வுட் மெடீரியா மெடிகா வென்னும்) மருந்து அகராதியும் மற்றுமுள்ள புஸ்தகங்களும் கூறுகின்றன.

ஒட்டடை கஷாயம் கொடுப்பது நம் நாட்டில் சகஜம். பலவீனப்பட்டு சுரம் அடித்துக் கொண்டிருந்தால் ஒட்டடை கஷாயம் அதை நீக்கும் என்பது நமது நாட்டு வாசிகளுக்கு நன்றாய் தெரிந்ததே. தலைவலிக்கு ஒட்டடையும் சுண்ணம்பும் சேர்த்துத் தலைக்குப் பத்து போட அந்நோய் நீங்கும். இது அநேகர்களின் அநுபவமுறை.

சுவாமிகள் சொன்னது போல யூனானி வைத்தியர்களும் க்ஷய முதலான வியாதிகளுக்கு ஒட்டடை கஷாயத்தில் மருந்து அநுபானமாய் கொடுப்பதுண்டு. ஒட்டடையானது சுவாசக் குழாயில் வேலைசெய்யக் கூடியது; உஷ்ணத்தைக் குறைத்து இருதயத்திற்கு பலத்தையுந் தருவது; இதில் இதற்கு நிகரான மருந்து இங்கிலீஷ் முறையிலேயே இதுவரை கண்டுபிடிக்கப் படவில்லை என்றே நான் திண்ணமாய்க் கூறுவேன். திருஷ்டாந்தமாய் சில கூறுகின்றேன்.

நம் நாட்டில் சீதளம் என்பதை இங்கிலீஷ் வைத்தியத்தில் இருதயபலவீன மென்று சொல்லுவார்கள். இருதய பல ஈனத்தால் இரத்த ஓட்டங் குறைந்து கொண்டு வருகின்றது. இந்த ஓட்டம் குறைந்த பாகங்களில் குளிர்ந்த உணர்ச்சியை உண்டாக்கும். இவ்வுணர்ச்சியை நோக்கியே நாம் சீதளம் வந்துவிட்டது என்று சொல்லுகிறோம். இதற்குப் பரிகாரமாக மேல் நாட்டார்கள் டிஜிடலிஸ், ஸ்டிக்கனைன், எக்ஸ்டிராக்ட் காக்டி கிராண்டி போலியம் விகுடம், நக்ஸ் வாமிகா என்னும் இருதய பலத்தை யுண்டுபண்ணும் மருந்துகளை வாய் மூலமாகவோ அல்லது இரத்த மூலமாகவோ சரீரத்தில் செலுத்துகின்றார்கள். இந்த வியாதிக்கு நம் நாட்டவர்களோ ஒட்டடை கஷாயம் வைத்து உள்ளுக்குக் கொடுத்து மேல் சொன்ன மருந்துகளால்

காணமுடியாத குணத்தைக் காண்கின்றார்கள். இவ்வளவு பெருமை வாய்ந்த நம்நாட்டுப் பெண்கள் வைத்தியம் கை நழுவக் கூடாது என்பதே நமது சுவாமிகளின் கருத்து.

நம்நாட்டில் அநேகர்கள் ஒட்டடைக்குப் பதில் புழுக் கூடுகளாகிய பட்டுத் துணியைச் சாம்பலாக்கி மேற்சொன்ன இருதய வியாதிக்கு கஷாயம் போட்டுக் கொடுப்பார்கள். பட்டு நூலும் ஒட்டடையும் ஒரே குணமுடையவை.

சில வைத்தியர்கள் பட்டுத் துணியை சாம்பலாக்கி வைத்துக் கொண்டு இருதய வியாதிக்காக அரிசிபிரமாணம் தேனில் காலை மாலைகளில் உண்ணக் கொடுத்து, பெரிய பெரிய வைத்தியர்களால் நிவர்த்திசெய்ய முடியாத இருதய வியாதிகளைக் குணப்படுத்தி 1000 கணக்கில் பணம் சம்பாதிப்பதை நான் பார்த்திருக்கின்றேன். இருதய வியாதியானது பலவகைப் படும். அவற்றுள் இருதய பலவீனம், பித்தவாயுவென்னும் இருதயவலி, இருதய அடைப்பு முதலிய வியாதிகளுக்கு மாத்திரம் ஒட்டடை, பட்டுத்துணி ஆகிய இவைகள் மேலானவை; மற்றும் இவை இருதய உஷ்ணத்தைக் குறைத்து இரத்தத்தைச் சரியானபடி பரவச் செய்யும்.

இத்தகைய அரும் பெரும் விஷயங்களை நமது கைவல்யச் சாமியார் அவர்கள் குடி அரசில் வரைவது நம்நாடு செய்த தவமே என்றாலும் நோய் வந்த பிறகு செய்யும் சிகிச்சைகளையே சகல நாடுகளும் கண்டுபிடிக்கக் கண்ணும் கருத்துமாய் இருக்கின்றனவே யொழிய நோய்வராதபடி வாழ சுக ஆதார முறைகளைக் கண்டு பிடிக்க இன்னும் முயல வில்லை என்றே சொல்லலாம்.

நம்நாடு சில வருடங்களுக்கு முன் இருந்ததைக் காட்டிலும் இப்போது அதிக நோய்வாய்ப் பட்டிலவதை நாம் காண்கின்றோம். ஆனால் ஒருவராவது என் இப்போது நோய்கள் அதிகப்பட்டன என்றாராயவில்லை. அக்காலத்தைவிட இக்காலத்தில் நாம் சீர்திருத்தமுற்று விளங்குவதாக நினைக்கின்றோமேயொழிய சீர்கெட்டு விளங்குவதாய் ஒருவரும் கருதுவது கிடையாது. இதற்குக்காரணம் நம் விசாரமின்மையே. ஆகையினாலே இனி ஒவ்வொரு அறிவாளிகளும் உலகத்தில் நோயணுகாத சுகாதார விதிகளை அதாவது குளித்தல், சுவாசித்தல், புசித்தல், உறங்கல், வேலை செய்தல், சூரியனில் காய்தல் முதலான நியமங்களை நன்கு உணரவேண்டும். 4-சொக்காய்களைப் போட்டுக் கொண்டு சரீரத்தில் காற்றும் சூரியஉஷ்ணமும் படாதபடி நடமாடுதல், சூரிய உஷ்ணமே தாக்காமல் மூடிவைத்துள்ள ஜலத்தை விஷமென உணராது அருந்தல் முதலான அநாகரீகமான காரியங்களைத் தடுக்கக் கூடிய சுகாதார போதனைகளைப் பரப்ப வேண்டும். அப்போதுதான் நம்நாடு நோயற்று விளங்கும். இந்த விதிகளுக்கே மேல்நாடுகளும் வரவேண்டி யிருக்கின்றன; வந்துகொண்டும் இருக்கின்றன. அதை விரிக்கிற் பெருகுமென விடுத்தனம்.

இதையே நமது கைவல்ய சுவாமிகளும் வற்புறுத்தி நமக்குப் போதிக்க முன் வந்ததைப் பற்றி என்னுடைய மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்தி வியாசத்தை முடித்துக் கொள்ளுகிறேன்.

---

# "காலத்தின் கோலம்"

"கதாரத்ன" கிருஷ்ணசாமி சர்மா.

பாலாற்றின் கரையில், அயலூர் என்னும் அக்கிரகாரத்தில் தண்டபாணி தீக்ஷித ரென்னும் அந்தண வித்துவான் ஒருவரிருந்தார். அவர், வேதத்திலும் சாஸ்திரங்களிலும் நல்ல பாண்டித்ய முடையவர். பாலாற்றின் பாய்ச்சலில் பூவசதி 10 ஏக்கர் நிலமும், கிராமப் புரோகிதமும் அவருக்குண்டு. அவர் பண்டைக்காலத்து ஆசாரம் நிறைந்தவர். அவருக்கோர் பெண்ணும் ஓர் பிள்ளையு மிருந்தார்கள். மகள் மூத்தவளாகையால் பெற்றோர் அவளைக் காலந்தவறாது ஆங்கிலம் கற்ற ஓர் வாலிபனுக்கு ரூபாய் ஆயிரம் வரதக்ஷிணையுடன் விவாகம் செய்து கொடுத்தார்கள். கோபாலன் என்னும் தன் குமாரனையும் தீக்ஷிதர், ஆங்கிலம் பயிலத் தம்மூருக்கு அடுத்தாற்போலுள்ள இராயவேலூருக்கு அனுப்பினர். சிறுவனும் புத்திசாலியாதலால் வருடந்தோறும் படிப்படியாய் வகுப்புகளைத் தாண்டிக்கொண்டு மேலேறிவந்தான். அவனது படிப்பின் நிமித்தமாகத் தீக்ஷிதர் தம்மூரைவிட்டு வேலூரில் குடியேறினர். அதன் பலனாய் அயலூரிலுள்ள தமது நிலங்கள் யாவும் சரியான கவனமின்மையால் பலன் கொடுப்பதிற் குறைந்துகொண்டே வந்தன. சுகமாய்க் கிராமவாசம் செய்வதை விடுத்து பட்டணங்களில் இரண்டு அறைகளை வாடகைக்கு வைத்துக்கொண்டு துன்புறும் கதிக்கு அவர் வந்துவிட்டார். ஆங்கிலக் கல்வியின் விஷயமறியாதார் இக்காலத்தி லிருப்பாரென்பது அசாத்தியமேயாம். ஒரு சிறுவன் எஸ்-எஸ்-எல்-ஸி பரீக்ஷையில் தேரவேண்டுமாயின் அவனது படிப்புச் செலவுகளுக்காக ரூ. 1500-வைத்து விடவேண்டியதே. நம் தீக்ஷிதருக்குப் புரோகிதவிருத்தியில் தக்க பொருள்கிடைக்காத காரணத்தாலும், கிராமத்தில் பூமி தக்க பலனளிக்காததாலும், நாளடைவில் நிலங்களை விலகூற நேரிட்டது. கோபாலன் எஸ்-எஸ்-எல்-ஸியில் பிரவேசிக்குந் தருணம், நம் தீக்ஷிதர் பாதி நிலங்களை விற்றுவிட்டார். சிறுவனும் அப்பரீக்ஷையில் தேறிவிட்டான். தீக்ஷிதர் தன் சிரமம் பலித்ததெனச் சந்தோஷித்தார். சிறுவனும் ஓர் பெரிய அரசாங்கத்தை வென்றதாக எண்ணி மனங் களித்தான்.

***

இதன் பின் செய்யவேண்டிய வேலை என்ன? கோபாலனின் மனம் இரவு பகலாய் யோசனைசெய்யத் தொடங்கிற்று. மற்றவர்களைப்போல் உத்தியோகம் சம்பாதித்துக்கொள்வதா? அல்லது இன்னும் படிக்கத் தொடங்குவதா என்பதே. பாடசாலை விடுமுறைக்கு அனைவரும் கிராமத்திற்குச் சென்றனர். கோபாலனுக்கு வயது சுமார் 16 இருக்கலாம். அயலூர் சென்றதும் சுற்றத்தாரும், தீக்ஷிதர் நண்பர்களும் கோபாலனைப் புகழ்ந்து பேசினர்கள்.

தீக்ஷிதர் தன் குமாரனை, வேலைக்கு அனுப்புவதா, படிக்க அனுப்புவதா என்னும் விஷயமாய் ஆலோசிக்கலாயினர். ஒரு நாள் தீக்ஷிதர் தன் மனைவியிடம் கூறலுற்றார். "நமது சிறுவன் சிறு பிராயத்திலேயே ஸ்கூல் பைனல் பாஸ் செய்துவிட்டான். இரண்டொருவர் அவனுக்குப் பெண் கொடுக்கவும் வருகின்றனர். இனி அவனைப் படிக்கச் செய்வதென்றால் மற்றுமுள்ள நிலத்தையும் விற்கவேண்டியதுதான். பெண் கொடுப்பவர் இனிமேல் படிப்பை ஏற்றுக்கொண்டால் நமக்குச் சௌகரியம். என்ன செய்யலாம்" என்றார்.

சிவகாமு :—நன்றாயிருக்கிறது; படிக்கவைக்க வேண்டியதே. நிலம் போனால் போகட்டும். படிப்பைத் தடுக்கலாகாது.

தீக்ஷிதர்:—அவன் படிப்பை உத்தேசித்து நிலத்தை விற்றுவிட்டால் பிறகு நாம் போஜனத்திற்கு என்ன செய்வது? விற்காவிடில் படிப்புக்குப் பணம் ஏது?

சிவ:—அதைப் பார்த்தால் எப்படி? பி. ஏ. வரையிலாவது படித்தால் தான் நன்றா யிருக்கும். நிலம் போனாலும் நமக்கொரு பிள்ளைதானே. படிப்பு விஷயத்தில் இப்படிப் பயப்பட்டால் எப்படி? அவன் சம்பாதிக்கமாட்டானா? வேணுமானால் அப்பொழுது வேண்டிய நிலம் வாங்கிக் கொள்ளலாம்.

தீக்ஷிதர்:—நீ சொல்வது சரிதான். ஆனால் பின்னால் இவன் சம்பாதித்து நம்மைக் காப்பானென்பது என்ன நிச்சயம். இந்தக் காலத்திய பிள்ளைகள் பெற்றோர்களை எவ்வளவு அருமையாகக் காப்பாற்றுகிறார்களென்பதை நீ கண்டதில்லையா? பக்கத்து வீட்டு அண்ணாவையர் பிள்ளையைப் பார். கோடி வீட்டுச் சுந்தரையர் பிள்ளை கதை என்ன? இவைகளை யோசித்தால் இனி படிப்பு வேண்டாமென்று தோன்றுகிறது.

சிவ:—நன்றாகச் சொன்னீர்கள். இவனும் அவர்களைப் போலிருப்பானா? நீங்கள் கனவிலும் கோபாலனை அப்படிப்பட்டவனென்று நினைக்கவே வேண்டாம். பின் சங்கதி எப்படியாயினும் ஆகட்டும். படிப்பைப் பற்றிக் கவனிக்க வேண்டியது தான்.

தீக்ஷி:—அப்படியானால் நாம் இதைப்பற்றி விவாதம் செய்வானேன். கோபாலன் என்ன சொல்லுகிறானோ கேட்போம். பிறகு நாம் செய்ய வேண்டியதை ஆலோசிக்கலாம்'' என்றார்.

இப்படி இருவரும் தர்க்கம் செய்து கொண்டிருக்கும்போது கோபாலனும் வந்து சேர்ந்தான். சிவகாமி அம்மாள் அதுதான் சமயமென்றறிந்து,

சி:—கோபாலா! உன் விஷயமாகத் தான் பேசிக்கொண்டிருந்தோம். இனிமேல் படிக்கப்போகிறாயா? அல்லது உத்யோகம் பார்த்துக் கொள்கிறாயா?

கோ:—அம்மா! என்ன என்னைக் கேட்கிறீர்கள்! அப்பா சௌகர்யம் எப்படியோ? படிக்கச் சொன்னால் படிக்கிறேன். வேலை பார்க்கச் சொன்னால் பார்க்கிறேன். அப்பா சொற்படி நான் நடந்து கொள்கிறேன். இதைப்பற்றி என்னைக் கேட்பானேன்.

சி:—அதற்கல்லடா. உன் இஷ்டம் தெரிந்தால், அப்பால் சௌகரியப் படி யோசிக்கலாம். உனக்கு இஷ்டமில்லாமல் பலவந்தம் செய்தால் எப்படி முடியும்? உன் இஷ்டத்தைச் சொல்.

கோ:—நான்தான் சொன்னேனே அப்பா சொற்படி என்று. பின்னும் என்னை ஏன் கேட்கவேண்டும். ஆனால் நான் ஒன்று மாத்திரம் சொல்லுகிறேன். என்னைப் படிக்கச் சொன்னால் படிக்க நான் சென்னைக்குத்தான் போகவேண்டும்; வேலூரில் படிக்கப் படிப்பில்லை. அதையும் சொல்லிவிட்டேன். நீங்கள் சௌகரியத்தை யோசியுங்கள்.

இதைக் கேட்ட தீக்ஷிதர் மனைவியுடன் "அவன் சொல்லுவது சரிதான். சௌகரியமிருந்தால் படிக்கிறான்; இல்லாவிடில் வேலைபார்க்கிறான். இப்பொழுது என்ன? நாளைக்கு யோசித்துக் கொள்ளலாம். சாயங்காலமாய் விட்டது'' என்று சொல்லி எழுந்தார்.

*

மறுநாள் பகல் போஜனமான பின், தீக்ஷிதர் இவைகளைப்பற்றி யோசிக்கலாயினர். சிவகாமியின் வார்த்தைகளுக் கிணங்கி கோபாலனைப் படிக்கவைக்கவே நிச்சயித்தார். அதனால் ஓர் சௌகரியமும் தீக்ஷிதருக்குத் தோன்றிற்று. அதாவது பி. ஏ. படித்தால் பெண்கொடுக்க வந்தவரிடம் ரூ 2000 பெறலாம் என்னும் எண்ணமேயாம். இவைகளை எல்லாம் அவர் யோசித்துத் தீர்மானித்தார். அன்றையதினமே அவ்வூரில் வணிகராகிய கோமுட்டி சின்னையாசெட்டி இடம் சென்று 2000 ரூபாய் மதிப்புள்ள ஓர் ஏகராநிலத்தை ரூ. 600-க்குக் கிரயம் முடித்து முன் பணமாக ரூ 100 பெற்றுக்கொண்டு வீடுசேர்ந்தார்.

மறுநாள் கோபாலனைச் சென்னைக்கனுப்ப நிச்சயித்து அவனிடம் ரூ 75 கொடுத்து அனுப்பினர். கோபாலன் அதைப்பெற்றுக்கொண்டு சென்னைக்கு வந்து கிறிஸ்டியன் காலேஜில் படிக்க ஓர் இடம் ஏற்பாடு செய்துகொண்டு ஊருக்குத் திரும்பினன்.

இன்னும் ஒருவாரத்தில் காலேஜுகள் திறக்கப்படுமாகையால், தனக்கு வேண்டிய படுக்கை, உடை முதலியவற்றை ஜாக்கிரதை செய்து கொண்டு சென்னைக்குப் புறப்பட்டான். தீக்ஷிதர் ஊரிலேயே இருக்க நிச்சயித்தார். இன்டர்மீடியேட் படிப்பைக் கோபாலன் சரிவர முடித்துவிட்டான். இந்த ஒரு வகுப்புக்கு மட்டும் ரூ 1500-தீக்ஷிதருக்குச் செலவாய் விட்டது. செலவுபோக மிகுந்தது ஏகரா 2-தான். இன்னும் பி. ஏ. படிப்புப் பாக்கியாய் இருக்கிறது. என்ன செய்வார் பாவம்; துணிந்தார். இருக்கிற இரண்டு ஏகராவையும் விற்று பி. ஏ. யில் கோபாலனைப் பாஸ் செய்து வைத்து விட்டார். காலேஜுகள் மூடப்பட்டன. கோபாலன் சிறப்பாய் ஊர் வந்து சேர்ந்தான். தீக்ஷிதருக்கு நிலங்கள்போய் மிகுதியானது கடன் ரூ 100-தான். இனி எவ்விதம் ஜீவிப்பது என்னும் கவலை தீக்ஷிதருக்கு வந்தது. என்ன செய்வார் பாவம். ஆனால் ஓர் ஆசை மாத்திரம் வைத்திருந்தார். அது கோபாலன் விவாகவிஷயமே. இல்லாத தன்மையால் வரதக்ஷிணை ரூ 2000-கேட்க நிச்சயித்தார். அவ்வருஷமே பெண் கொடுக்கச் சிலர் தீக்ஷிதர் வீட்டுக்கு வாத்தலைப் பட்டார்கள். அவர்களில் ஒருவரை மாத்திரம் இங்கு தேர்ந்தெடுப்பது நலம். மதுரை சப் ஜட்ஜியாய் இருந்தவரும் நாராயண சாஸ்திரியாரின் ஏக புத்திரியாகிய புஷ்பவனம் என்பவளைக் கோபாலனுக்கு விவாகம் செய்விக்க நிச்சயமாயிற்று. ரூ 2000-வரதக்ஷிணை கொடுக்கவும் சாஸ்திரியார் ஒப்புக்கொண்டார். மற்ற சீர்வகையும் சிறப்பாய்ச் செய்வதாக ஒப்புக்கொண்டார்; வக்கீலுக்குப் படிக்கவும் சகாயம் செய்வதாய் ஏற்றுக்கொண்டார். தீக்ஷிதருடைய கவலை எல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல் விலகிற்று. விவாகமும் சிறப்பாய் நடந்தேறிற்று. தீக்ஷிதர் கடனையும் தீர்த்து விட்டார்.

***

தீக்ஷிதர் சாஸ்திரியாரின் சகாயத்தாலும் தம்மிடமுள்ள பணத்தாலும் கோபாலனை பி. எல். வரையில் படிக்கவைத்தார். அதுவும் முடிந்து அவன் வேலூரிலேயே வக்கிலாக போர்டு முதலானவைகள் போட்டுக்கொண்டான். தீக்ஷிதர் மனக்கவலை நீங்கி மகிழ்ந்தார்.

நாளையதினம் வரப்போகும் விஷயத்தை இன்று எவரும் அறியவியலாதல்லவா? புஷ்பவனம் சாந்தி செய்துகொண்டு சம்சாரத்தில் அகப்பட்டுக் கொண்டாள். அவள் சப் ஜட்ஜியின் பெண்ணானதால் வேலை செய்தறியாள்; அகமுடையான் வீட்டில் வேலைசெய்ய நேர்ந்தது. என் செய்வாள் பாவம்; சிலநாட்கள் பொறுத்தாள்; அவளால் பொறுக்க முடியவில்லை; ஆலோ

சித்தான்; கிழங்களுள்ள வரைக்கும் தனக்குக் கஷ்டம் நீங்காதென்று நினைத்தாள். அவர்களைத் தொலைக்க முயற்சித்தாள்; அவள் என்ன செய்வாள். அது பெற்றோர்களுடைய குற்றமே யன்றி பெண்ணின் குற்றமாகாது. சிறு வயதில் பழக்கினு லல்லவோ உடம்பு வளையும். இல்லா விட்டால் எப்படி முடியும். தன் கணவனுக்குத் தலையணை மந்திரம் உபதேசிக்க முயன்ருள். உபதேசம் சில நாட்களுக்குள் முதிர்ந்துவிட்டது. அச்சமயமே கோபால னுக்குத் தன் மாமனுரின் சிபார்சால் ஜில்லா முன்சீப் உத்தியோகமும் கிடைத்துவிட்டது. அத்துடன், தன் மனைவியைக் குலதேவதை என்று அவன் நினைக்கத் தொடங்கினன்; ஒருநாள் தலையணை மந்திர பலத்தால் பெற்ருேர்களைக் கண்டிக்க நிச்சயித்தான்; மனமோ துணியவில்லை; மனைவியின் கஷ்டத்தைப் பொறுக்கமாட்டாமல் தவித்தான்.

ஒருநாள் காலையில் கச்சேரிக்குப் போகுங்கால் தன் தந்தையை நோக்கிக் கொடிய பார்வையால் ஓர் முறை பார்த்து "அப்பா! நீங்கள் செய்வது சரியல்ல. புஷ்பவனத்தை ஏன் கஷ்டப்படுத்துகிறீர்கள். அவள் உதவியா லல்லவோ நமக்கு இந்த மேன்மை உண்டாயிற்று. அவள் இரவு பகலாய் அழுத வண்ணமாகவே இருந்து வருகிருள். நீங்களிருவரும் துன்புறுத்துவதாய்ச் சொல்லுகிருள். உங்களுக்கு வயதாய் விட்டதேயன்றி வேருெரு பிரயோசனமுமில்லை. புஷ்பவனத்தை அனுசரித்து இருப்பதானல் இருங்கள் இல்லாவிட்டால் உங்கள் இஷ்டம்போல் வேறெங்கேனும் செல்லுங்கள்" என்றுரைத்தான்.



" இஷ்டமாயின் இருங்கள்; இல்லாவிடில் வேறெங்கேனும் செல்லுங்கள் "

அதுகேட்டு தீக்ஷிதர் நடு நடுங்கினர். அவரும் அவர் மனைவியும் ஒருவித குற்றமு மறியார்கள். வீட்டுவேலைகள் யாவும் சிவகாமுவே செய்து வரலானுள். அப்படி இருந்தும் அவளுக்குப் பெயரில்லாது போயிற்று. தீக்ஷிதர் கோபாலனின் கடுஞ்சொற்களுக்குத் தாங்காது துடிதுடித்தார். சற்று நேரத்திற்குப் பிறகு சிவகாமுவை யழைத்து 'நான் முன்னமே சொன்னே னல்லவா? உனக்கு என் வார்த்தைகள் விஷம்போ லிருந்தனவே! கோபாலன் வார்த்தைகளை நீ கேட்டாய் அல்லவா? நான் நிமிஷநேரமும் இவ்விடம் இருக்கமாட்டேன். இவ்விடம் இருக்க

உனக்குச் சம்மதமாயின் இரு. இல்லாவிட்டால் வா என்னுடன். என் பிச்சை எங்கும் போய்விடவில்லை' என்று துக்கத்துடன் கூறினர்.

சிவகாமுவும் கோபாலன் வார்த்தைகளைக் கேட்டு மனம் சலித்தாள்; இனி, நிமிட நேரமும் அவ்விட மிருக்கலாகாதெனத் தீர்மானித்தாள். தீக்ஷிதர் கேள்விக்கு விடையாக "எனக்கு மாத்திரம் இவ்விடம் என்ன வேலை? உங்களை விடப் பிள்ளை எனக்குப் பெரிதல்ல. நானும் உங்கள் கூடவே வருகிறேன்" என்றாள். இவ்விதம் இருவரும் வெளியேற நிச்சயித்தனர்.

மறுநாள் காலையில் கோபாலன் காப்பி யருந்தி வெளியில் செல்லும் போது தீக்ஷிதர் "அப்பா! நான் போய்வருகிறேன். சௌக்யமாய் இரு" என்று கூறிவிட்டுப் புறப்பட்டார். கூடவே சிவகாமுவும் புறப்பட்டாள்.



"அப்பா! நான் போய்வருகிறேன் சௌக்கிமாய் இரு"

படிப்பவர் 'என்ன ஆச்சரியம்! இதற்குள்ளும் இவ்வளவு வெறுப்பு தோன்றிற்றல்லவா?' என்று யோசிக்கலாம். அது இயற்கையே. சிலர் பொறுப்பர். சிலர் பொறுக்க மாட்டார்கள். எல்லாவற்றையும் துறந்து, பிள்ளை படித்தால் போது மென்னும் இக்காலத்திய மோகத்தா லுண்டாகும் படிப்பின் முடிவு இதுவேயாம். இதற்கொருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டுவதில்லை. இது காலத்தின் கோலமன்றோ? மேலே கதையைக் கவனிப்போம்.

தீக்ஷிதர் வீட்டை விட்டுப் புறப்பட்டு "காலத்தின் கோலமிது; நான் கனவிலும் கண்டதில்லை" என்று பாடிக்கொண்டே சென்றார். உபாதானம் செய்து கொண்டும் க்ஷேத்திரங்களைத் தரிசித்துக் கொண்டும் மனைவியுடன் யாத்திரை செய்யலானார்.

புஷ்பவனம் தன் கோரிக்கை நிறைவேறிற்றென்று களித்தான். கோபாலனுக்கு மாத்திரம் அது சகியாததாக இருந்தபோதிலும் புஷ்பவனம் என்ன நினைத்துக் கொள்ளுகிறானோ வென்று நினைத்துச் சகித்திருந்தான்.

சில நாட்களுக்குள் கோபாலன் மீது ஓர்கேசில் லஞ்சம் வாங்கியதாகப் புகார் உண்டாயிற்று. அது ஹைகோர்ட்டாரால் விசாரணைக்கு எடுத்துக் கொள்

ளப்பட்டது. இவனது குற்றமும் ருஜுவாகி விட்டது. ஒருநாள் காலையில் தந்தி ஆபீஸ் சேவகன் ஒருவன்வந்து கோபாலனுக்குச் சலாம்செய்து ஓர் தந்தியைக் கொடுத்தான். அதை அவன் பிரித்துப் படித்துவிட்டு அப்படியே பிணம்போல் நின்றான். தந்தியிலுள்ள சமாச்சாரமாவது கோபாலனை வேலையினின்று எடுத்து விட்டதுடன் வக்கீல் தொழிலையும் மேற்கொள்ளலாகாது என்பதே. என்ன செய்வான் பாவம்! கலங்கி நின்றான்; பிழைக்கும் வழியே இல்லாது போயிற்று.



"தந்தி கண்டதும் பிணம்போலானான்"

ஒருவருக்குக் கஷ்டம் வருங் காலத்தே நடந்தவைகளைப்பற்றி யோசிப்பது சகஜமல்லவா? அதுபோல் கோபாலன் தன் வரலாற்றைப் பற்றி யோசிக்கலானான். முடிவாக அவனுக்கு இது பெற்றோர்களை அலைய விட்டதன் பலனென்றே தோன்றிற்று. அதனால்தான் கோபாலனுக்கு இக் கொடிய காலம் வந்ததென்று யாம் கூறத் துணியவில்லை. ஆயினும், பெற்றோர்களை அலைய விடுவது மாத்திரம் புதல்வர்களின் க்ஷேமத்திற்கனுகூலமாகாது என்பது உண்மையன்றோ?

'என் பெற்றோர்களைத் துரத்திய காரணத்தால் நான் இப்போது துன்பம் அனுபவிக்கிறேன்' என்று அவன் வருந்தலானான்.

வாசகர்களே! நாம் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்றும், "தந்தை தாய்ப் பேண்" "தந்தை சொன்மிக்க மந்திரமில்லை" என்றும், "தாய் சொற்றுறந்தால் வாசகமில்லை" என்றும் வழங்கும் விதிகளை நன்குணர்ந்து பெற்றோரை ஆதரித்துப் போற்றிவருவோமாக.

## நாணயம்

'நாணயம்' என்னும் சொல்லுக்கு இரண்டு பொருளுண்டு. நாணயத்திற்கு (பணம்) நாணயம் (வாக்கு உறுதி) வேண்டும்!—நாணயத்திற்குள்ளே யொரு நாணயம் மறைந்து நிற்கிறது பாருங்கள்—என்கிறார் ஜாம்பவான்!

# "கூட்டுறவு"

(N. C. சக்கிரவர்த்தி)

நம் இந்திய தேசத்தில் முன்னோர்கள் பண்டையகால முதற்கொண்டு சமூகவாழ்க்கையில் ஈடுபட்டிருந்தனர் என்பதை மறுக்க யாவராலும் இயலாது. கிராமங்களிலும் குக் கிராமங்களிலும் ஜனங்கள் ஒருவரோடொருவர் ஒத்து வாழ்ந்து கஷ்ட நிஷ்டூரங்களையும் சுகங்களையும் அனுபவித்துக் கொண்டிருந்தனர். ஆனால் காலம் மாறிக்கொண்டு வருவதால் தெய்வபக்தி குறைந்து கொண்டும் பண ஆசை விருத்தியாகியும் பட்டணங்களிலும் நகரங்களிலும் பணம் சம்பாதிக்க அநேக சுலபமான வழிகள் ஏற்படுத்தியும், புது மாதிரியான இயந்திரங்கள் ஏற்பட்டும் இருத்தலின் ஜனங்கள் கிராமங்களிலிருந்து கும்பல் கும்பலாகப் பட்டணங்களுக்கு வந்து குடியேறினார்கள். மேலும் கிராமத்தில் குடியானவர்கள் மழை இல்லாமையாலும் பஞ்சத்தினாலும் அநேக விதமான கஷ்டங்களுக்கு ஈடுபட்டு கடன்காரர்களாய் விட்டார்கள். இச் சமயத்தில் "கூட்டுறவு" என்ற தெய்வ இயக்கம் நம் தேசத்தில் அரசாங்கத்தாரால் வெளி தேசங்களிலிருந்து கொண்டுவரப்பட்டது.

## "இக்கூட்டுறவு" இயக்கத்துக்குத் தலைவர் யாவர்?

இந்திய தேசம் தற்காலம் கஷ்ட நிலைமையிலிருப்பது போல சுமார் எண்பது வருஷங்களுக்கு முன்பு ஜெர்மெனி தேசத்து குடியானவர்கள் எல்லாரும் கடன்காரர்களாய் சௌகாரிகளிடம் அதிக வட்டிக்குப் பணம் வாங்கிமிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தனர். அச்சமயத்தில் கடவுளருளால் ஷுல்ட்ஸ் டெலிஷ் (Shewtz Deliszh) என்றும் ரேபிஸன் (Raiffeisen) என்றும் சொல்லப்பட்ட இரண்டு பெரிய மனிதர்கள் இப் பூமியின்கண் தோன்றினர். அவர்களில் ரேபிஸன் துரை தம் தேசத்திலிருக்கும் கிராம வாசிகளுக்கு நன்மை செய்ய விரும்பி, தமது சேனை உத்யோகத்தையும் வெறுத்து பொதுஜன ஊழியம் செய்ய வந்து சேர்ந்தார். அவர் "கூட்டுறவு" என்னும் மந்திரோபதேசத்தினால் ஜனங்களின் கஷ்ட நிவாரணம் செய்ய ஆரம்பித்து முதல் முதலாக ஜனங்களுக்கு கடன் சுலப வட்டிக்குக் கொடுத்து திருப்பி செலுத்துவதற்கு சுலபமான வசதிகளையும் ஏற்படுத்த முயற்சி செய்தார்.

## கூட்டுறவு என்றால் என்ன?

நம் தேசத்தில் வெகு நாளாக ஐக்கியமே பலம் என்னும் பழமொழி வழங்கி வருகிறது. இதைக் குறிப்பிட கதை ஒன்றுண்டு. இது அனைவரும் அறிந்துள்ளதாயினும் அதை ஞாபகப்படுத்துகிறேன். ஒரு கிழவன் தான் இறந்து போகும் தறுவாயில் ஒற்றுமையில்லாத தன் நான்கு குமாரர்களையும் அழைத்து தன்னிடத்தி லிருந்த சுள்ளிகள் அடங்கிய கட்டொன்றைக் கொடுத்து அதை அப்படியே ஒடிக்கச் சொன்னான். ஒவ்வொருவனும் தனியாகவும் சேர்ந்தும் அந்தச் சுள்ளிக்கட்டை உடைக்க முயன்றும் முடியவில்லை. பிறகு அவர்களுடைய தகப்பனான கிழவன் கட்டை யவிழ்த்துத் தனித்தனி

யாக்கி துண்டுகளாக்கும்படி சொல்லவே அந்தக் குமாரர்கள் அதைச் சுலபமாகச் செய்து முடித்துவிட்டனர். பிறகு கிழவன் அவர்களுக்கு ஒற்றுமையின் நன்மையை உபதேசித்து இறந்து போனான். ஆகவே ஐக்கியத்தில் அனுகூலம் இருக்கிறது என்பதை யறிந்த பெரியோர்கள் கூட்டுறவு சங்கங்களை ஆங்காங்கு ஏற்படுத்தினர்.

கூட்டுறவின் முக்கிய தத்துவங்கள் என்ன?

முதலாவது ஒரே தொழிலைச் செய்யும் மனிதர்களின் சங்கத்தைத்தான் "கூட்டுறவு" என்பர். இரண்டாவது அதில் அங்கத்தினராக சேரவிரும்புவோர் தங்களுடைய சௌகரியங்களுக்காகவே பாடுபடவேண்டும். அங்கத்தினர்க்குள் உயர்வு தாழ்வு என்ற வித்தியாசம் கூடாது. "கூட்டுறவு" இயக்கம் கட்டாயத்தால் ஏற்படுவதல்ல. அவரவர்கள் தாங்களாகவே அதில் அங்கத்தினர்களாகச் சேரவேண்டும். இந்த அங்கத்தினர்கள் லாபம் என்ற ஆவலைக் கொண்டாவது அல்லது லாபம் சம்பாதிக்க வேண்டுமென்றாவது அங்கத்தினராகச் சேரக்கூடாது. ஒவ்வொரு "கூட்டுறவு" சங்கமும் அதனதன் அங்கத்தார்களாலேயே நடத்தப்பட்டு வரவேண்டும். நற்குணங்களை யுடைய சங்கத்தையே பெரியோர்கள் "கூட்டுறவு" என்று வழங்கினார்கள். இக் கூட்டுறவின் கொள்கையை எல்லா விதமான துறைகளிலும் அல்லது தொழில்களிலும் உபயோகப்படுத்தலாம். ஆனால் நம் தேசத்தில் இவ்வியக்கம் ஏற்பட்டு சுமார் 25 வருஷகாலமாகியும் சரியான நிலைமைக்கு வந்து குடியானவர்களுக்கு தகுதியான உதவி புரியாததற்கு அநேக காரணங்கள் உண்டு. கூட்டுறவு இயக்கத்திற்கு பிதாவாகிய உல்ப் (T. W. Wolfe) என்ற மேல் நாட்டார் சொல்லியபடி இந்தியாவில் இவ்வியக்கம் விருத்தியடைவதற்கு அநேக இடையூறுகள் உள்ளன. அவைகளில் ஜனங்களுக்கு கடன் அதிகரித்திருப்பது ஒரு காரணமாகும். அதைக் காட்டிலும் முக்கியமானது ஜனங்களுடைய அறியாமையாம்.

மேலும் ("Co-operation is the Child of Necessity") "கூட்டுறவு" அநேக நாளைய கஷ்டத்தின் பலன் ஆனதால் அது ஒவ்வொரு தேசத்தில் ஒவ்வொரு பலனை யளிக்கிறது. ஜெர்மன் தேசத்தில் நாணய சங்கமாகவும் பிரான்சு தேசத்தில் கைத்தொழில் அபிவிருத்தி சங்கமாகவும் இங்கிலாந்தில் உணவுப் பொருள்களை அளிக்கும் சங்கமாகவும் டென்மார்க்கு தேசத்தில் விவசாய நாணய சங்கமாகவும் அமெரிக்காவில் கட்டிடங்கள் கட்டும் சங்கமாகவும் கூட்டுறவு சங்கம் வழங்கி வருகின்றது. இந்தியாவிலும் டென்மார்க்கைப்போல விவசாய நாணய சங்கங்கள் அநேகமாக ஏற்படுவது அவசியமாக இருக்கிறது.

இத்தகைய "கூட்டுறவு" சங்கங்களில் குடியானவர்களும் கிராமவாசிகளும் அங்கத்தினர்களாகச் சேர்ந்து தங்களுக்கும் நன்மை புரிந்துகொண்டு இவ்வியக்கத்தையும் விருத்தி செய்யவேண்டியது. ஆகையால் நம் தேசத்தின் முன்னேற்றத்தில் ஈடுபடும் பெரியோர்கள் இவ்வியக்கத்தை விருத்தி செய்ய பிரசங்கங்கள் வாயிலாகவும் "ஆனந்த போதினி" போன்ற ஸாது நலப் பத்திரிகை வாயிலாகவும் இவ்வியக்கத்தின் நோக்கத்தையும் பலனையும் நம் தேச ஜனங்களுக்குத் தெரிவித்து அவர்கள் தற்காலத்தில் இருக்கும் பரிதாபகரமான நிலையிலிருந்து கரையேறப் பார்க்க வேண்டும். எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவானாக.

# ஸ்ரீ பகவன் நாம வைபவம்.

மாந்தை-சா. கிருஷ்ணய்யர்.

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றேயுலகு".—(குறள்) (1)

எழுத்துகளெல்லாம் " அ " காரத்தை முதலெழுத்தாக உடைத்தாயிருக்கின்றன. அதே போல, இவ் வையகம் ஸ்ரீ பகவானையே—கடவுளையே முன்னிலையாகக் கொண்டு உண்டாயிருக்கின்றது. கடவுளில்லையேல் இவ்வுலகுமில்லை. ஆகையால், இவ்வுலகிலுள்ள மாந்தர் அனைவரும் இவ்வுலகந் தோன்றக் காரண பூதனுயுள்ள உத்தமனைப் போற்றி வழிபடல் வேண்டும்.

"ம்ருத் பிண்டமேகம் பஹுபாண்டரூபம்
ஸுவர்ண மேகம் பஹு பூஷணத் மகம் ।
கோக்ஷீர மேகம் பஹுதேநு ஜாதம்
ஏகஃ பராத்மா பஹுதேஹ வர்தீ ॥—(நீதிசா) (2)

பாண்டங்கள் பலவகையானுலும் அதன் மூலகாரணமான மண் ஒன்றே. ஆபரணங்கள் அநேக தினுசுகளானுலும் அவைகள் உற்பத்திக்குக் காரணமாகவிருந்த பொன் ஒன்றே. பசுக்கள் பலவகையானுலும் அவற்றினிடத்தினின்றும் உண்டாகும் பால் ஒன்றே. அதேபோல சரீரம் பலவானுலும் அவைகளினிடம் குடிகொண்டிருக்கும் பரமாத்மா ஒருவனே யாவன்.

"ஏகமேவாத்விதீயம்" என்ற அத்வைத வாக்யம் கவனிக்கத்தக்கது.

ஏகமாய், ஸர்வமாய், ஜகத் ஜோதியாய், எல்லாம் வல்ல பரம் பொருளைப் போற்றி வழிபடுவதினுலேயே நாம் இம்மானிடப்பிறவியை யெடுத்ததன் பயனைப் பெற்றவராவோம்.

"அரிது அரிது மானிடராதல் அரிது"—(ஔவை) (3)

என்றபடி கிடைத்தற்கரிய இம்மானிடப்பிறவி கிடைத்துள்ள இச்சமயத்தை, "கண்டதே காக்ஷி கொண்டதே கோலம்" என்றபடி வீண் போக்காமல், "காற்றுள்ளபோழுதே தூற்றிக்கொள்" என்பதுபோல எல்லாந் தானுகவுள்ள ஏக, பரம் பொருளை மனமாரப் போற்றி, அவரிடம் இடையறுத பக்தியைச் செலுத்தி அவரது பரிபூரணமான அனுக்கிரகத்தைப் பெற முயலவேண்டும்.

"இப்பிறவி தப்பினுல் எப்பிறவிவாய்க்குமோ" (4)

என்றபடி பெறற்கரிய அறிவாகிய பகுத்தறிவிற்கு ஆதாரமான இப்பிறவியை, ஸ்ரீ பகவத் பக்தியி லீடுபடுத்தி பேரின்பப் பெரும்பேற்றையடைய முயலாவிட்டால் பிறகு எவ்விதமான பிறவி கிடைக்குமோ யாரறிவார் ?

இக்கலியில் இகத்தில் சுகத்தையும், பரத்தில் பேரின்பப் பெரும் பேற்றையும்,-மோக்ஷத்தையும் அளிக்கவல்லதும், எல்லோராலும்,-எச்சமயத்தார

லும்,-எப்போதும்,-எச்சமயத்திலும் அனுஷ்டிக்கத்தக்கதும், எவ்விதத்திலும் மிக்க சுலபமானதுமான மார்க்கம்,-வழி, "ஸ்ரீ பகவத் பக்தி" செய்தலே யென்று பல பெரியோர்களும் கூறிப் போந்துள்ளார்கள்.

பக்தி செய்வதற்குப் பல வழிகள் இருக்கின்றன. அவ் வழிகளுள் "ஸ்ரீ பகவன் நாமஸ்மரண,—நாமநாமோச்சாரண,—நாமஸங்கீர்த்தன"மே ராஜபாட்டையாகும் என்றும் கூறியுள்ளார்கள்.

"த்யாயன் க்ருதே யஜன் யஜ்ஞைஃ
த்ரேதாயாம் த்வாபரே ஸர்ச்சயன் ।
யதாப்நோதி ததாப்நோதி
கலௌ ஸங்கீர்த்திய கேசவம்॥ (5)

க்ருத யுகத்தில் (அநேக வர்ஷகாலம்) த்யானத்தைச் செய்துவந்தவனும், த்ரேதா யுகத்தில் (அநேக) யாகாதி க்ரியைகளைச் செய்து வந்தவனும், த்வாபர யுகத்தில் (ஸஹஸ்ரநாமார்ச்சனை, லக்ஷார்ச்சனை, முதலியவைகள் செய்து அபிஷேகாதி) பூஜைகளைச் செய்துவந்தவனும், எந்தவிதமான பலனை யடைவானோ அதே பலனை இக்கலியில் ஸ்ரீ பகவன் நாமஸங்கீர்த்தனை செய்து வருவதொன்றினாலேயே அடையப்பெறலாகும். ஸ்ரீபகவன் நாமத்தின் மகிமையைக் கூற ஆயிரம் சிரசுடைய ஆதிசேஷனாலும் முடியாதென்றால் கேவலம் சிற்றறிவு பெற்றுள்ள நம்மால் கூறுவதென்பது முடியுமா?

"பக்தியைச்செய்தால் முக்தியைப் பெறலாம்".

## ஸிலோன் சந்தா நேயர்களுக்கு அறிவிப்பு.

ஸிலோனிலிருக்கும் நமது சந்தாநேயர்கள் அனுப்பும் மணியார்டர் தொகையும் பதிவு செய்தனுப்பும் மணியார்டர் பாரமும் தனுஷ்கோடி போஸ்டாபீஸில் நிறுத்திக் கொண்டு அவர்கள் வேறு பாரம் எழுதி யனுப்புவதால் சந்தாநேயர்கள் அவர்கள் மணியார்டர் பாரத்தில் எழுதியனுப்பும் முழுசமாசாரமும் சந்தா நெம்பரும் எங்களுக்குத் தெரிவிக்கப் படுவதில்லை. ஆகையால் பாரம் எழுதும்பொழுது சந்தா நெம்பரைப் பேருக்கு முன் போட்டு எழுதவும்.

உதாரணமாக:—

1856 C. D. கந்தையா,
யாழ்ப்பாணம்,
ஸிலோன்.

இப்படி எழுதினால் அதேப்படி எங்களுக்குத் தனுஷ்கோடி போஸ்டாபீஸிலிருந்து எழுதிவரும். அப்பொழுது நாங்கள் சுலபமாகச் சந்தா நம்பரைத் தெரிந்துகொள்ள முடியும்.

# வேர்க்கடலையின் உபயோகம்.

(ஆசிரியர், A. சுருளியாண்டி கௌடா.)

தாவரவர்க்கங்களிலிருந்து கிடைக்கும் லாபத்தைப்போல் வேறொன்றி லிருந்து கிடைப்பதில்லை யெனலாம். வேர்க்கடலையைப்பற்றி, அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் ஆராய்ச்சி செய்ததில், அது தேங்காயின் உபயோகத்திற்குச் சமமானதெனக் கூறுகிறார்கள். அமெரிக்காவில் விவசாய சாஸ்திரத்தில் தேர்ச்சி பெற்றவரான ஸ்ரீ ஜார்ஜ் கார்வேர் என்பவர் வேர்க்கடலையின் உபயோகங்களைப் பற்றிப் பலவித ஆராய்ச்சிகள் செய்திருக்கிறார். அவர் கூறுவதாவது:—இது (வேர்க்கடலை) ஓர் உயர்ந்த ஆகாரம்; அநேக வழிகளில் இது மனிதர்க்குப் பயன்படக்கூடியது; ஒரு ராத்தல் மாட்டிறைச்சியில் உள்ள சத்தைப் போல் இரு மடங்கு சத்து ஒரு ராத்தல் வேர்க்கடலையிலுண்டு.

பிரான்ஸ்தேசத்தில் திராக்ஷை ஏராளமாகப் பயிராவதற்குப் "பாஸ்டர்" என்பவர் காரணமாயிருந்ததைப் போலவே, அமெரிக்காவில் வேர்க்கடலையின் விருத்திக்கு மேற்கூறிய புரோபஸர் கார்வர் என்பவரே காரணம். இவரது ஆராய்ச்சித் திறமையால் உலகிற்கு வேர்க்கடலையின் உபயோகம் நன்கு விளங்கிற்று. இதனால், அமெரிக்காவில் ஒன்றுக்கும் உதவாமல் கிடந்த அநேக நிலங்கள், இப்பொழுது வேர்க்கடலை பயிர் செய்யப் பயன்படுகின்றன. இச்செடிகள் ஆகாயத்திலுள்ள "நைட்ரஜன்" என்னும் சத்தை ஆகாயத்திலிருந்து கிரஹித்து பூமிக்குச் சேர்க்கிறபடியால் நிலங்கள் அதிக உரம்பெற்று மற்றப் பயிர்களும் உற்பத்தியாக இடமேற்படுகின்றது. இதனால் விவசாயத்திற்கும் மிகுந்த அநுகூலமேற்படுகின்றது.

## உயர்ந்த பால்.

ஒரு டம்ளர் வேர்க்கடலையிலிருந்து பசுவின் பாலை யொத்த சத்துள்ள ஒரு பயின்ட் உயர்ந்த பால் உற்பத்தி செய்யலாம். அதைக் காப்பி, டீ முதலியவைகளுக்கு உபயோகிக்கலாம். வேர்க்கடலையிலிருந்து ஐந்துவித மாவுகளும் ரொட்டிகளும், கால் நடைகளுக்கு வேண்டிய நான்கு வகை ஆகாரங்களும் தயார் செய்யலாமென புரோபஸர் கார்வர் கூறுகிறார். அன்றியும் மருந்து வகைகளில் அதை எவ்வளவு தூரம் உபயோகிக்கலாமென ஆராய்ச்சி செய்து வருகிறாராம். வேர்க்கடலைப் பருப்பின் மேல் மூடியுள்ள மெல்லிய சிவப்புத் தோலிலிருந்து கொய்னா தயார் செய்யலாம். பசுவின் பாலில் உள்ளதைப் போல் பன்னிரண்டு பங்கு அதிகக் கொழுப்பும், அதிலுள்ள தண்ணீரில் பத்தில் ஒரு பாகம் தண்ணீரும் வேர்க்கடலையின் பாலில் உள்ளபடியால், சாதாரணமாகப் பாலுக்குப் பதிலாக இதை உபயோகிக்கலாம். இதிலிருந்து தயிர் முதலியவற்றையும் தயார் செய்யலாம். நோயாளிகளுக்கு இந்தப் பால் மிக்க உபயோகமாயிருக்கும் என ஆராய்ச்சிக்காரர்கள் கூறுகின்றனர்.

## பலவித உபயோகங்கள்.

ஒன்பது வகை மரச் சாயங்களும் பத்தொன்பது வகைத் தோல் சாயங்களும், மெட்டல் பாலிஷ் கொழுப்பு, சோப்பு, இங்கி, கிளிசரைன், கொயினா முதலியவற்றையும் வேர்க்கடலையிலிருந்து செய்யலாம். மொத்தத்தில் இதனால் மனித சமூகத்திற்கு அளவற்ற பிரயோஜனம் என்று புரோபஸர் கார்வர் கூறுகிறார்.

# அறிஞரின் அமுதமொழிகள்

S. V. V.

1. Pride, the never failing vice of fools *Pope.*
மூடர்களை ஒருபோதும் விட்டகலாத தீமையே கர்வம். (போப்)

2. Araise! Awake! and stop not till the goal is reached. *Vivekanandha.*
எழுமின்! விழிமின்! கருதிய கருமம் கைகூடும் வரை உழைமின்! உணர்மின்! (விவேகானந்தர்)

3. Time flies, death urges, knells call
Heaven invites, Hell threatens. *Young.*
காலம் பறக்கின்றது, மரணம் மன்றாடுகின்றது, சாவொலி சப்திக்கின்றது, வானம் வரவேற்கின்றது. (யங்)

4. Those that come unto me, shall cross the river of life *Bible.*
பிறவிப் பெருங்கட லீந்துவர் நீந்தார் இறைவ னடிசேரா தார். (குறள்)

5. To err is human, to forgive is divine *Pope.*
தவறுதல் எளிது, பொறுத்தலோ பெரிது. (போப்)

6. Ye have heard that it hath been said,
Thou shalt love thy neighbour, and hate
thine enemy. But I say unto you love your enemies *Bible.*
'அயலானிடம் அன்பு கொண்டொழுகு; பகைவனை வெறுத்து பல்காலும் நட' வென்று பலர் கூற நீ கேட்டிருப்பாய்; ஆனால் நான் சொல்லுவதைக் கடைப்பிடி: "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயஞ் செய்து விடல்." (குறள்)

7. Sweet is pleasure after pain *Dryden.*
நிழலினருமை வெய்யிலில் தெரியும். டிரைடேன்)

8. My soul followeth hard after thee;
thy right hand upholdeth me. *David's Psalms*
துன்பவழியிற் றுயருற் றுனைநாடி அன்புட னென்னுன்ம அலைகின்ற அப்போதும்
மன்னுதிரு வலக்கரத்தால் மாண்புடையாய் நீ ஏற்பாய்!"
டேவிட் தோத்திரங்கள்.




# கிருஷ்ணஸிங் அல்லது துப்பறியும் சீடன்.

(558-ம் பக்கத் தொடர்ச்சி)

**ஆரணி-குப்புசாமி முதலியார்.**

**கிட்டு:**—அப்படியானாற் சரிதான். இராஜவேலை நமது கையிற்சிக்கச் செய்யச் செய்திருக்கும் வியப்பான ஏற்பாடு இன்னதென்று தெரியுமா?

**பிச்சன்:**—பைசல் செய்கிற மாதிரியா யிராவிட்டால் எனக்குத் திருப்தி யில்லை.

**கிட்டு:**—இச் சந்தர்ப்பத்தில் குரூரச் செயல் ஒன்றும் வேண்டாம். இது மனோன்மணி மூலமாய் நடைபெற வேண்டும்.

**முனியன்:**—அப்படியானால், நான் அறுத்துக் கொள்கிறேன். குள்ளா நீ எப்போதும் எச்சரிக்கையாயிரு" என்றான்.

**கிட்டு:**—" குள்ளனைப்பற்றி பயம் வேண்டாம். அப்படி கேள்வியுண்டானால் அந்தச் சமயத்தில் அவன் என்கூட விருந்தானென்று ருசு செய்ய எனக்குத் தெரியும். ஆயினும் அப்படி நேரிடாது. உனக்கும் அது தெரியும் அந்த இருபதினாயிரத்தில் கொஞ்சம் செலவுசெய்ய உனக்கு ஏதாவது சாக்குவேண்டும்போ லிருக்கிறது" என்றான்.

பிச்சன் கலகலவென நகைத்து விட்டு அறைவிட்டுச் சென்றான். அவன் சென்றதே கிட்டு " சரி யினி கை சோர்ந்துவிட்ட அக்கடிதம் எங்குபோயிற் றென்று ஆராய்வோம்." என்றான்.

அச்சமயத்தில் தீபம் திடீலென்று அணைந்துவிட எங்கும் இருள் சூழ்ந்து கொண்டது. ஏனெனில், பிச்சன் சென்றதே இவர்கள் கடிதத்தைத் தேடுவார்களென்று ஆனந்தஸிங் அறிவான். ஆகையால் அவன் வாயிற்படி யருகி லிருந்த மின்சாரதீபத்தி னருகில் மெதுவாய்ச் சென்று தீபம் எரியும் மரையைச் சட்டென்று திருப்பி விட்டான். அதனால் சட்டென்று அங்கிருந்த மூன்று தீபங்களும் அணைந்து விட்டன. கள்ளர்கள் அதைப்பற்றி சபித்துக் கொண்டிருக்கையில் ஆனந்தஸிங் அந்த அறையை விட்டுப் பின்னாலிருந்த அறைக்கு நழுவிக் கொண்டான். அங்கிருந்து கொண்டே கள்ளர் தீபங்களை யேற்றி படுக்கை யறை முதற்கொண்டு எங்கும் தேடும்போது அவன் பின்னறையிலிருந்தே யாவும் ஒற்றுக் கேட்டுக்கொண் டிருந்தான்.

எங்கு தேடியும் கடிதம் அகப்படவே யில்லை. கிட்டு "நான் சத்தியமாய் அக்கடிதத்தைச் சேபியில் வைத்துக்கொண்டு வந்தேன் என்கிறான். மற்ற இருவரும்-அப்படி நீ கொண்டுவந்திருந்தால் இங்கு வந்த பிறகு யாராவது திருடிக் கொண்டிருக்க வேண்டும் என்கிறார்கள்.

**முனியன்:**—"கோபத்தோடு நம்மில் யாராவது ஒருவர் அதைக் களவாடிக் கொண்டதாக நினைக்கிறாயோ?" என்றான்.

**கிட்டு:**—"இல்லை யில்லை. கிருஷ்ணஸிங் இறந்துபோனது நிச்சயம் என்று மட்டும் எனக்குத் தெரிந்திரா விட்டால், அவனே மாயமாய் வந்து இதைக் களவாடினான் என்று உறுதியாய்க் கூறுவேன்" என்றான்.

முனியன்:—"சே கிடக்கிறது. கிட்டு, நானும் பிச்சனும் நாளைக்கு எங்கே சந்திப்பதென்று ஏற்பாடாகவில்லை." என்றான்.

கிட்டு:—சரி, அப்படியானால் இப்போது ஏற்பாடு செய்வோம். குள்ளன் காலை பிச்சனுக்குக் கூறுவான்.

குள்ளன்:—"அதெல்லாம் சரிதான். காலையில் பிச்சனை நான் எங்கே கண்டு பிடிப்பது? அவன் இரவிற்கு ஆனந்தமாய்க் காலத்தைக் கழிக்கப் போகிறான். அது எனக்கு நன்றாய்த் தெரியும். அவன் இங்கேயும் அகப்படமாட்டான். பழைய விடத்திலுமிருக்க மாட்டான்" என்றான்.

கிட்டு:—மூட மிருகங்கள் இங்கே யிவ்வளவு வேலை யிருக்கையில் அவன் வெறிக்கக் குடிக்காமல் என் வீட்டிலேயே யிருக்கலாகாது.

குள்:—நீ பிச்சனைப்பற்றி கலவரப்பட வேண்டியதில்லை. அவன் வேலைக்கு வண்டியோடு தயாராய் வந்திருப்பான். முனியன் மட்டும் சௌக் வீதியில் அவனுக்காகக் காத்துக் கொண்டிருக்கட்டும். அவன் குறித்த காலத்திற்குத் தவறாமல் வந்து விடுவான்.

கிட்டு:—அப்படித்தான் செய்யவேண்டும். போக்கடித்து விட்ட கடிதத்தைத் தேடாமலிருப்பது எனக்குப் பிடிக்கவில்லை. ஆயினும் நேரமாகிறது. முனியா அந்த அறைக்கு வந்து எனக்காக இரண்டு கடிதங்கள் எழுது.

அவர்கள் இருவரும் ஆனந்தஸிங் ஒளிந்திருக்கும் அறைக்குப் பின் அறையில் சென்று உட்கார்ந்தார்கள். இரண்டிற்கும் மத்தியில் சிறு சாளரமுண்டு. ஆனந்தஸிங் இவர்களென்ன எழுதுகிறார்கள் பார்ப்போமென்ற எண்ணத்தால் அச் சாளரத்தைக் கொஞ்சம் திறந்து பார்த்துக்கொண்டிருந்தான்.

கிட்டு:—"முதலாவது இராஜவேல் மனோன்மணிக்கு எழுதியதாய் ஒருகடிதம் வேண்டும்." என்றான். அச்சமயம் ஆனந்தஸிங் சட்டென்று தலையையுள்ளே யிழுத்துக்கொண்டான். ஆகையால் கிட்டு அப்புறம் கூறியது அவனுக்குக் கேட்கவில்லை.

அச்சமயம் வேதம்மாள் வீட்டின் வழியாய்வரும் அலமாரி கள்ளக்கதவு திறக்கப்பட்டது. வேதம்மாள் அதன் வழியாய் வந்தாள். அப்போது அடித்தமணி சத்தத்தைக்கேட்ட குள்ளனும் அங்கு வந்தான். இருவரும் சற்றுநேரம் குசுகுசுவென்று பேசினார்கள். ஆனந்த ஸிங்குக்கு அவர்கள் சம்பாஷணை யொன்றுமே கேட்கவில்லை. அதோடு கிட்டும் முனியனும் பேசுவதையும் கேட்க முடிய வில்லை.

கடைசியில் வேதம்மாள் திரும்பிச் செல்ல ஆரம்பிக்கும்போது கெட்டியாய், "என்மகளுக்கு இந்த விஷயங்களில் என்னளவுகூடக் கூறவேண்டாம். பத்திரம். அப்படிச் செய்தால் அவள் இவ்விஷயத்தில் சம்பந்தப்படவே மாட்டாள். முதலாவது எனக்கே பிரியமில்லை. ஆனால் அது அவள் தப்பிதமே. இங்கு நடக்கும் விஷயங்களை அவள் ஏன்வந்து கவனிக்க வேண்டும்.

இதற்குள் கிட்டுவின் கள்ளக் கையொப்பமிட்ட கடிதங்கள் எழுதியாய் விட்டன. குள்ளன் அங்கு சென்றதே கிட்டு "குள்ளா! இதோ இக்கடிதங்களை வாசி பார்ப்போம்" என்றான். (தொடரும்)



# வர்த்தமானப்பகுதி

ஒரு தபால் கார்டில் 10,000 வார்த்தைகள்:— ஒரு ஜர்மானிய கலைஞர் ஒரு சாதாரணமான தபால் கார்டில் 3 மாதங்கள் கஷ்டப்பட்டு 10,000 வார்த்தைகளை ஒரு பென்சிலால் எழுதி யுள்ளாராம்.

***

வருஷம் 8,500,000,000 சிகரெட்டுகள் :—'மான்சூரியா' நகரிலுள்ள 7,500,000 ஜனங்கள் வருடா வருடம் சுமார் 8,500,000,000 சிகரெட்டுகள் குடிக்கின்றார்களாம்.

***

ரோட்டி தின்னும் குதிரைகள்:— மாஸ்கோ நகரில் ரொட்டிகள் ஓட்ஸைவிட விலைசரசமா யிருப்பதால் குதிரைகளுக்கு ரொட்டியையே ஆகாரமாய்க் கொடுக்கிறார்களாம்.

***

குழிமுயல்கள்:— வருஷா வருஷம் இங்கிலாந்தில் சுமார் 44,000,000 குழிமுயல்கள் இறக்குமதி யாகின்றனவாம்.

***

உலக ஜனத்தொகை:— 1,849,5,00,000 இதனுள் ஆசியா ஜனத்தொகை 1,013,000,000; ஐரோப்பா ஜனத்தொகை 475,000,000 மட்டுமேயாம்.

***

10ல் ஒருபாகம் நாய்:— இங்கிலாந்தின் முழு ஜனத்தொகையில் பத்தில் ஒருபாகம் நாய்கள் உளவாம். நாய்க் கண்காட்சிக்காக மட்டும் சமீபத்தில் நடந்த க்ரப்ட்ஸ் கண்காட்சியில் சுமார் $1\frac{1}{2}$மைல் தூரம் பெஞ்சிகள் போடப் பட்டிருந்தனவாம்.

வருஷத்தில் 1,000,000000, டிகட்டுகள்:-லண்டனில் ரயில்வே ட்ராம்கார்கள் முதலியவைகளைத் தவிர 4500 பஸ்கள் இருக்கின்றனவாம். அவைகள் 200 வழிகளில் ஓடுகின்றனவாம் அவை யாவும் சுமார் 1,000 மைல்கள் ஆகுமாம். அவற்றின் 2,000,000 ஆசனங்கள் இருக்கின்றனவாம்.

ஒவ்வோராண்டிலும் 1,000,000,000 டிக்கட்டுகளுக்கு அதிகமாகவே வாங்கப்படுகிறதாம். விற்ற டிக்கட்டுகளின் எடை சுமார் 560 டன்கள் ஆகுமாம். ஒவ்வொரு வருஷமும் 22,500,000 காலன் பெட்ரோல் செலவாகின்றதாம்.

***

ஆபரணம் பூண்ட ஆமை:— லண்டன் இம்பீரியல் ஆகாயப் போக்குவரவுக் கம்பெனியார் ஒரு பிரயாணி விட்டுச் சென்ற ஒரு பெட்டியைத் திறந்து பார்த்தபோது அதனுள் ஒரு ஆமை உயிருட னிருந்ததாம். அதன் முதுகோட்டில் விலையேறப் பெற்ற நவரத்தினங்கள் பதிக்கப்பட்டிருந்தனவாம்.

***

உடம்பில் இரும்பு :—ஒவ்வொருவருடைய உடலிலும் ஒரு பெரிய ஆணியளவு இரும்பும், 2000 தீக்குச்சிக்கான கந்தகமும் ஒரு சிறிய அறைக்கு அடிக்கக்கூடிய சுண்ணும்பும் இருக்கின்றனவாம்.

***

நாய்த் தலையுள்ள ஆடு:-பார்செட்டில் ஆடுகளுக்கு நாய்களால் அதிகம் தொந்தரை ஏற்பட ஒரு ஆடு நாய்த் தலையுடன் பிறந்ததாம். அவ்வாடு இறந்து விட்டதாம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

சுக்கில௵ ஆனி௴—கலியுகாதி 5031, சாலிவாகனம் 1852,
பசலி 1338-39—கொல்லமாண்டு 1104—ஹிஜரி 1348,
இங்கிலீஷ் 1929௵—ஜுன்௴—ஜுலை௴

| ஆனி௴ | ஜுன்௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வெ | அஷ்42-3 | உத்58-35 | சி58-35அ | மிதுனாவி-நா-17-40 |
| 2 | 15 | சனி | நவ42-23 | அஸ்60 | மர60 | திருதினஸ்பிருக் |
| 3 | 16 | ஞா | தச44-20 | அஸ்1-5 | அமி1-5சி | தசஹரா விரதம் |
| 4 | 17 | திங் | ஏகா47-50 | சித்5-15 | பிர5-15அ | சர்வ, மத்வ, ஏகாதசி |
| 5 | 18 | செவ் | து52-25 | சுவா10-45 | சி10-45ம | இராமலக்ஷ்மண துவாதசி |
| 6 | 19 | புத | திர57-53 | விசா17-10 | சித்60 | பிரதோஷம், கரிநாள் |
| 7 | 20 | வியா | சது60 | அனு24-20 | சி24-20பி | திருதினஸ்பிருக், கதிராயுக் |
| 8 | 21 | வெ | ச○1-18 | கே31-48 | ம31-48அ | ○ பௌர்ணமி |
| 9 | 22 | சனி | பௌ9-55 | மூல39-25 | சித்60 | |
| 10 | 23 | ஞா | பிர16-0 | பூரா46-53 | சி46-53அ | |
| 11 | 24 | திங் | துதி21-50 | உத்53-55 | ம53-55அ | |
| 12 | 25 | செவ் | திரி27-15 | திரு60 | சித்60 | |
| 13 | 26 | புத | சது31-55 | திரு0-53 | சி0-53பிர | |
| 14 | 27 | வியா | பஞ்35-35 | அவி6-15 | சி6-15மர | |
| 15 | 28 | வெ | சஷ்38-0 | ச10-55 | சித்60 | |
| 16 | 29 | சனி | சப்38-53 | பூர14-10 | ம14-10சி | |
| 17 | 30 | ஞா | அஷ்33-15 | உத்15-55 | அமி60 | |
| 18 | 1 | திங் | நவ35-50 | ரேவ16-3 | சித்60 | |
| 19 | 2 | செவ் | தச31-40 | அஸ்14-15 | சித்60 | |
| 20 | 3 | புத | ஏகா25-48 | ப✲10-48 | சி10-48அ | கிருத்திகை |
| 21 | 4 | வியா | து18-23 | கிரு5-53<br>ரோ59-43 | மர60 | பிரதோஷம், அவமாகம், கடன் நீக்க |
| 22 | 5 | வெ | திர9-53 | மிரு52-38 | சித்60 | அவமாகம், மாசசிவராத்திரி |
| 23 | 6 | சனி | சது0-38<br>●அ51-5 | திரு45-8 | சித்60 | சர்வத்திர அமாவாசை; அவமாகம், ஆனி அமாவாசை |
| 24 | ஜுலை 7 | ஞா | பிர41-33 | புன37-38 | சித்60 | ஆஷாடசுத்தம் |
| 25 | 8 | திங் | துதி32-30 | பூச30-35 | சித்60 | ரதயாத்ரதுதியா |
| 26 | 9 | செவ் | திரி24-23 | ஆயி24-35 | சித்60 | நவக்கிரகசாந்திசெய்ய |
| 27 | 10 | புத | சது17-50 | மக19-58 | சி19-58அ | அவமாகம், ஸ்கந்தபஞ்சமி |
| 28 | 11 | வியா | பஞ்12-53 | பூர17-5 | சித்17-5ம | சஷ்டி, மாடுவாங்க |
| 29 | 12 | வெ | சஷ்9-58 | உத்16-10 | சி16-10அ | ஆனித்திருமஞ்சனம் |
| 30 | 13 | சனி | சப்9-5 | அஸ்17-23 | மர60 | சுபகாரியங்கள் விலக்க |
| 31 | 14 | ஞா | அஷ்10-18 | சித்20-33 | சித்60 | வியாதியஸ்தர் மருந்துண் |
| 32 | 15 | திங் | நவ13-20 | சுவா25-30 | அ25-30ம | கடகரவி நா-44-25 |

| | | | |
|---|---|---|---|
| | ராகு சுக் | குரு புத | சூரி |
| | 9-சிம்-செவ்<br>17-ரிஷ-சுக்<br>23-மிது-புத | | செ |
| — | | | — |
| சனி | | கே | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" POWER PRESS,
LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.